




# அருள்மிகு பார்த்தசாரதி சுவாமி திருக்கோயில், திருவல்லிக்கேணி, சென்னை-5

தொலை பேசி:: 28442462

Web site : www.sriparthasarathyswamytemple.com

E.mail : parthasarathytemple@vsnl.net


## வைகுண்ட ஏகாதசி

## பரமபதவாசல் திறப்பு வைபவம்

**''விற்பெருவிழவும் கஞ்சனும் மல்லும் வேழமும் பாகனும் வீழச்**
**செற்றவன் தன்னைப்புரமெரிசெய்த சிவனுறுதுயர்களை தேவை**
**பற்றலர்வீயக் கோல்கையில் கொண்டு பார்த்தன் தன் தேர் முன்நின்றானைச்**
**சிற்றவை பணியால் முடிதுறந்தானைத் திருவல்லிக்கேணி கண்டேனே''.**

- திருமங்கையாழ்வார்.

திருமகள் கேள்வனான எம்பெருமான், இப்பூவுலகத்திலுள்ள உயிர்களை உய்விக்க வேண்டுமென்று திரு உள்ளம் கொண்டு, பின்னானார் வணங்கும்சோதி என்று கொண்டாடப்படும் வகையில் பல்வேறு திருக்கோலம் கொண்டு அருளுகிறார்.

மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்களால் பாடல்கள் பெற்ற 108 திவ்ய தேசங்களில் தொண்டை மண்டலத்தில் ஒன்றான திருவல்லிக்கேணி அருள்மிகு பார்த்தசாரதி சுவாமி திருக்கோயிலில் ஸ்ரீ ருக்மணித் தாயாருடன் எழுந்தருளும் அருள்மிகு பார்த்தசாரதி சுவாமிக்கு முத்துடைத்தாமம் நிறை தாழ்ந்த பந்தல் கீழ், நம் திருமாமணி மண்டபத்தில் கோப்புடைய சீரிய சிங்காதனத்தின் மேல் நாமும் நம் நாச்சிமார்களும் என்கிற எம்பெருமான் திருஉள்ளப்படி பகல்பத்து, வைகுண்ட ஏகாதசி, இராப்பத்து கீழ்க்கண்ட நிகழ்ச்சி நிரலின்படி வெகு சிறப்பாக நடைபெறவுள்ளது,

பகல்பத்து உற்சவம் 20.12.2006 முதல் 29.12.2006 வரை நடைபெறுகிறது. தினசரி மாலை 6.00 மணிக்கு உட்புறப்பாடு நடைபெறும்.

**30.12.2006 வைகுண்டஏகாதசி -**

**அதிகாலை 4.30 மணிக்குச் சொர்க்கவாசல் திறப்பு.**

இராப்பத்து உற்சவம் 31.12.2006 முதல் 8.1.2007 வரை நடைபெறுகிறது. 31.12.2006 முதல் 7.1.2007 வரை மாலை 6.00 மணிக்கும், 8.1.2007 அன்று காலை 11.00 மணிக்கும் சொர்க்கவாசல் திறக்கப்படும்.

சேவார்த்திப் பெருமக்கள் அனைவரும் தவறாது இப்பெருவிழாவில் கலந்து கொண்டு, அருள்மிகு ருக்மணி சமேத பார்த்தசாரதி சுவாமியின் திருவருளைப் பெற்றுய்யுமாறு வேண்டுகிறோம்.

இத்திருக்கோயில் ஸ்ரீ நரசிம்மர் சன்னதி கொடிமரத்திற்கு தங்கரேக் பதிக்கும் பணி மேற்கொள்ளப்படவுள்ளது. பக்தர்கள் தங்கள் காணிக்கைகளைத் திருக்கோயில் அலுவலகத்தில் செலுத்திடக் கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.


த. காவேரி
உதவி ஆணையர்
துணை ஆணையாளர்/ செயல் அலுவலர்/தக்கார்.
(கூ.பொ.)



திருக்கோயில்

திருவள்ளுவர் ஆண்டு 2037 விய- மார்கழி
மாலை 48 மணி 12 டிசம்பர் 2006

# அன்பார்ந்த வாசகப் பெருமக்களே!

**வணக்கம்.**

"மாதங்களில் நான் மார்கழி" என்று பகவான் கிருஷ்ணரால் சிறப்பைப் பெற்றதும், வழக்கமாக சுப்ரபாதம் கேட்கும் திருவேங்கடத்தான், ஆண்டாளின் திருப்பாவையைக் கேட்டு, அதன் பின்னர் சுப்ரபாதம் கேட்கும் சிறப்பைப் பெற்றதும், மார்கழித் திங்களாகும். சைவத் திருக்கோயில்களில், மாணிக்கவாசகரின் திருவெம்பாவை ஓதியதற்குப் பின்னர் தேவாரத் திருமுறைகளை ஓதும் சிறப்பு பெற்றதும், மார்கழித் திங்களே. மார்கழி என்றாலே திருப்பாவையும், திருவெம்பாவையும் தட்டி எழுப்பும் ஆன்மிக உலகுக்கு, கடுங்குளிர் வாட்டும் மாதம் என்பது கண்கூடாகும். இம்மாதத்தில் கடுங்குளிரையும் பொருட்படுத்தாது, அதிகாலையில் துயிலெழுந்து, நீராடி, இறைவன் அருள்பெற திருக்கோயில்களை நாடிச் செல்லும்போது, நோய் எதிர்ப்பு சக்தி இயற்கையாக நமக்குக் கிடைக்கும் ஓர் அரிய இயற்கை வரப்பிரசாதமாகும். இத்தகைய சிறப்பு கொண்ட இம்மார்கழித் திங்களில், சிவபெருமானுக்குரிய "திருவாதிரை" நட்சத்திரமும், திருவரங்கனுக்குரிய "வைகுண்ட ஏகாதசி", "சொர்க்கவாசல் திறப்புப்" பெருவிழாவும் ஒரு சேர வருவது ஆன்மிக உய்விற்கு சிறப்பு சேர்க்கும் மாதமாகும். இத்தகு சிறப்பு கொண்ட இம்மார்கழித் திங்களில் அதிகாலை நீராடி, திருக்கோயில்களுக்குச் சென்று இறையருள் பெறுவோமாக.

ஆன்மிக நிகழ்வுகளை அள்ளித்தரும் "திருக்கோயில்" திங்களிதழின் இம்மாத இதழில், "திருமாலை அறியாதார், திருமாலை அறியார்" என்று சிறப்புப் பெற்ற தொண்டரடிப்பொடி ஆழ்வாரின் முன்வினைப் பயனைக் கழிக்க, இறைவன் செய்த அருட்பயனை, திருமதி. இந்திரா ஆராவமுதனும், "தொண்டின் மூலம் இறைவனின் அன்பைப் பெறலாம்" என்று "ஆவிக்கோர் பற்றுக் கொம்பு" எனும் தலைப்பில் முனைவர் டி.எஸ். இராமஸ்வாமி அவர்களும் வழங்கியுள்ள கருத்தோவியங்கள், படித்து இன்புறத் தக்கன.

முதுமைக்கு முடிசூட்டி அழகு பார்க்கும் சேக்கிழார் பெருமானின் "வடிவுறு மூப்பு" என்னும் சொல்லாட்சியிலுள்ள சொல்நயம், பொருள்நயம், அணிநயம் ஆகியவற்றில் திளைத்து திருநீலகண்டரின் வடிவுறு மூப்பினை, புலவர் மு.இராசரத்தினம் அவர்கள் வழங்கியுள்ள கட்டுரையும், "பகைவரை அன்பினால் வெல்லலாம்" என்பதை "மெய்ப்பொருள் நாயனார்" வரலாற்றின் மூலம் திருமதி. கே.பாலசுந்தரி அவர்கள் வழங்கியுள்ள கருத்தோவியமும், இன்றைய இளைய சமுதாயத்தினருக்கு ஓர் அறிவுத் திறவுகோல் என்றால், அதில் ஐயமில்லை.

தமிழ்நாட்டின் ஒருமைப்பாட்டிற்கு அடித்தளமாக அமைந்துள்ள இறைவன் பவனிவரும் திருக்கோயில் திருத்தேர்களிலுள்ள பொறியியல் நுணுக்கங்களையும், திருவாரூர்த் தேரில் அமைந்துள்ள பழைமை வித்தகர்களின் பொறியியல் நுணுக்கங்களையும், தற்கால நிலைக்கேற்ப கொடுத்து வரும் மாற்றங்கள் பற்றியும் திரு.மா.கந்தசுவாமி அவர்கள் வழங்கியுள்ள கட்டுரை நம் முன்னோர்களின் பழைமைப் பொறியியல் நுணுக்கங்களை நாம் தெரிந்து கொள்வதற்கு மட்டுமல்லாது, சிந்தனைக்கோர் சிறந்த கட்டுரையாகும்.

சிவபெருமானின் முழுமுதற்றன்மையினை பொறியாளர் திரு.எம்.குப்புசாமி அவர்களும், "கயிலாயம் ஓர் ஆன்மிகக் குறியீடு" எனும் தலைப்பில் தமிழாகரர் திரு. தெ. முருகசாமி அவர்களும் வழங்கியுள்ள கட்டுரைகள் மிகச் சிறப்பாக உள்ளன.

"கச்சிக் கச்சாலை எம்மான்" எனும் தலைப்பில், காஞ்சிபுரம் அருள்மிகு கச்சபேஸ்வரர் திருக்கோயிலைப் பற்றியும், நடுநாட்டுத் திருவரங்கம் மற்றும் ஜம்புகேஸ்வரத்தைப் பற்றியும், "பொன்னார் மேனியனே" எனத் தொடங்கும் பாடலைப் பாடியருளிய சுந்தரமூர்த்தி நாயனாருக்கு "திருமழபாடி மறந்தனையோ" என நினைவூட்டிய திருமழபாடி அருள்மிகு வைத்யநாத சுவாமி திருக்கோயிலின் சிறப்பினையும், திருத்தல உலாத் தலைப்பின் கீழ் இவ்விதழில் கட்டுரைகளாக வெளிவந்துள்ளன.

அனைவரும் திருக்கோயில் இதழைப் படித்து மகிழ்ந்திட அன்புடன் வேண்டுகிறேன்.

அன்புள்ள

**இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை,**
**119, உத்தமர் காந்தி சாலை,**
**சென்னை - 600 034.**

(த. பிச்சாண்டி, இ.ஆ.ப.)
ஆணையாளர்



தமிழ்நாட்டிலுள்ள இந்து சமய திருக்கோயில்களில் இந்துக்களில் உரிய பயிற்சியும், தகுதிகளும் உள்ள அனைவரும் சாதி வேறுபாடின்றி அர்ச்சகர்களாக நியமனம் செய்யப்படலாம் எனத் தமிழக அரசு பிறப்பித்த அரசாணையை செயல்படுத்துவது தொடர்பாக ஆலோசனைகள் வழங்குவதற்காக நியமிக்கப்பட்ட ஓய்வுபெற்ற உயர்நீதிமன்ற நீதிபதி, நீதியரசர் திரு. ஏ.கே.இராசன் அவர்கள் தலைமையிலான உயர்நிலைக்குழு, தனது அறிக்கையினை 23.11.2006 அன்று மாண்புமிகு முதலமைச்சர் டாக்டர் கலைஞர் அவர்களிடம் சமர்ப்பித்தது. மாண்புமிகு இந்து சமயம் மற்றும் அறநிலையத்துறை அமைச்சர் திரு. கேஆர். பெரியகருப்பன், உயர்நிலைக்குழு உறுப்பினர்கள் குன்றக்குடி திருவண்ணாமலை ஆதினம், தவத்திரு தெய்வசிகாமணி பொன்னம்பல தேசிக அடிகளார், திருக்கயிலாய பரம்பரை மெய்கண்ட சந்தானம், கயிலை குருமணி சீர்வளர்சீர் சாந்தலிங்க ராமசாமி அடிகளார், தமிழ்வளர்ச்சி பண்பாடு மற்றும் அறநிலையத்துறையின் சிறப்பு ஆணையர் மற்றும் செயலாளர், திரு. இரா.கற்பூரசுந்தரபாண்டியன், இ.ஆ.ப., மற்றும் இந்து சமய அறநிலைய ஆட்சித்துறையின் சிறப்பு ஆணையர் மற்றும் ஆணையர் திரு.த.பிச்சாண்டி, இ.ஆ.ப., ஆகியோர் உடனிருந்தனர்.

## காலச்சுவடுகள்

செம்பியன் மாதேவியார், கண்டராதித்தச் சோழரின் மனைவியார். மதுராந்தகன் என்னும் உத்தம சோழர்க்குத் தாயார். தஞ்சாவூர்ப் பெரிய கோயிலைக் கட்டிய முதலாம் இராஜராஜ சோழனின் பெரிய பாட்டியார். சிவபக்தியில் மிகவும் சிறந்தவர். 'அருள்மொழிவர்மன்' என்னும் முதலாம் இராஜராஜ சோழனை இளமையிற் சீராட்டிப் பாராட்டி வளர்த்தவர். நாகப்பட்டினத்திற்கு அருகில் இவர் பெயரால் செம்பியன் மாதேவி என்னும் ஓர் ஊர் உள்ளது. அங்குள்ள கயிலாசநாதர் கோயில் இவர் கட்டியதேயாகும். கோனேரி ராஜபுரம், விருத்தாசலம், தென் குரங்காடுதுறை, திருவக்கரை, திருக்கோடிகா, குத்தாலம், திருமணஞ்சேரி, திருவாரூர், ஆநாங்கூர் ஆகிய இடங்களிலும் இவர் கற்றளிகள் எடுப்பித்துள்ளார். திருவிசைப்பாவில் உள்ள ''கோயிற்பதிகம்'' என்னும் பாடல்களைப் பாடியருளிய 'சிவஞான கண்டராதித்த தேவர்' எனப் புகழப் பெறுபவருமாகிய தம்முடைய கணவரின் நினைவாகக் ''கண்டராதித் தேச்சுரம்'' என்னும் பெருங்கற்றளியினைத் திருநல்லம் (கோனேரி ராஜபுரம்) என்னும் பாடல் பெற்ற சிவதலத்தில் இவர் பூசைசெய்வது போல், ஓர் அழகிய சிற்பமும் இவரால் அமைக்கப் பெற்றுள்ளது. திருவக்கரைச் சிவன் கோயில் இவரால் கட்டப் பெற்றது.

ஆண்டாள்
அருளிச் செய்த

# திருப்பாவை

''மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்
நீராடப் போதுவீர்! போதுமினோ, நேரிழையீர்!
சீர்மல்குமா ய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள்!
கூர்வேற் கொடுந்தொழிலன் நந்தகோ பன்குமரன்
ஏரார்ந்த கண்ணி யசோதை யிளஞ்சிங்கம்
கார்மேனிச் செங்கண் கதிர்மதியம் போல்முகத்தான்
நாராயணனே நமக்கே பறைதருவான்
பாரோர் புகழப் படிந்தேலோ ரெம்பாவாய்''

## இதழின் உள்ளே ....

# கச்சிக் கச்சாலை எம்மான்

-அனுஷா



பல்லவ மன்னர்களின் பெயர்களை எண்ணும்போது அந்த வரிசையில் பளிச்சிடுவது இராஜ சிம்ம பல்லவன் என்னும் பெயராகும். காஞ்சி மாநகரம் என்னும் நினைவு மனத்தில் தோன்றியவுடன், இப்பெருமன்னனுடைய பெயரும் உடன் தோன்றி சிந்தனைகள் தேரோட்டமாக உலாவரும். காஞ்சி மாநகரத்தைக் கலைகளின் இருப்பிடமாகச் செய்ததில் பெரும் பங்கு ஆற்றியவன் இவன். ''கோயில் நகரம் காஞ்சிபுரம் என்ற புகழை இந்நகரத்திற்குத் தந்தவர்களுள் இப்பெருமன்னனும் ஒருவன். காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு பல்லவ சாம்ராஜ்யத்தை இம்மன்னன் ஆட்சி புரிந்த ஏழாம் (7ஆம்) நூற்றாண்டில், இவனது அரசசபையில் இருந்த அறிஞர்களுள் ''தண்டி'' என்ற வடமொழிக் கவிஞரும் ஒருவர். இவர் எழுதிய இலக்கண நூல் ''காவிய தரிசனம்'' என்பது. அந்நூல் தமிழில் ''தண்டியலங்காரம்'' என்ற பெயரில் செய்யுளுக்குரிய அணி இலக்கண நூலாகத் திகழுகின்றது. அணி இலக்கணத்தில் ஒரு மேற்கோள் காட்டும் போது, காஞ்சி மாநகரில் உள்ள கச்சபேசம் என்னும் சிவன் கோயில் கூறப்படுகின்றது. இதோ அந்த மேற்கோள் பாடல்,

**நீலமணிமிடற்றன் நீண்ட சடைமுடியன்**
**நூலணிந்த மார்பன் நுதல்விழியன் - தோலுடையன்**
**கைம்மான் மறியன் கனல்மழுவன் ''கச்சாலை**
**எம்மான் இமையோர்க்(கு) இறை.**
**என்பதாகும்**

- தண்டியலங்காரம்

கச்சபேஸ்வரர் கோயில், கச்சாலீஸ்வரர் கோயில் என்று பலவாறு மக்களால் வழங்கப்படும். இத்திருக்கோயில் காஞ்சிபுரத்தின் நடுநாயகமாக இராஜவீதிகள் கூடுமிடத்தில் மிக உயர்ந்த இராஜ கோபுரத்துடன் கம்பீரமாகக் காட்சி தருகின்றது. (திருமலி) தொண்டை நாட்டின் தலைநகரம் என்றும், சப்த மோக்ஷபுரி எனப்படும் ஏழு நகரங்களுள் முதன்மையானது (முத்தி நகர் ஏழினுள்ளும் முக்கியமாம் கச்சி) எனவும், வடமொழிப் புலவன் மகாகவி காளிதாசனால் நகரேஷுக் காஞ்சி எனவும்,அப்பர் பெருமானால் கல்வியைக் கரையிலாத காஞ்சிமாநகர் எனவும் பலவாறு புகழப்படுகின்ற இந்த நகருக்குப் பெருமை சேர்ப்பதில் கச்சபேசுவரர் திருக்கோயில் ஒருதனியிடம் வகிக்கிறது. பண்டைக்காலம் தொட்டுப் பல்வகை மதத்தினருக்கும் இருப்பிடமாக விளங்கி, சிவகாஞ்சி, விஷ்ணு காஞ்சி, ஜைன காஞ்சி, பௌத்த காஞ்சி என்னும் பெரும் பிரிவுகளைக் கொண்டு விளங்கி இன்றும் சிவகாஞ்சி என அழைக்கப்படும் பகுதியில், பெரிய இடப்பரப்பில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.

பல்லவ மன்னர்கள் கல்லிலே கலைவண்ணம் கண்டவர்கள், கற்பாறையைக் கவின் பாறையாக மாற்றி, அதில் கடவுளர் உருவங்களையும், கலை நயங்களையும் காட்டியவர்கள் அவர்கள். அவர்களுடைய கலைப்பணியை முழுமையாகக் கொண்டு விளங்குவது கச்சபேசுவரர் திருக்கோயிலாகும். பல்லவர்கள் தாங்கள் எடுப்பித்த கற்றளிகளில், கருவறையில் உள்ள சிவலிங்கத்திற்குப் பின்னால் சுவற்றில் அம்மையப்பர் (அல்லது சோமாஸ்கந்தர்) வடிவத்தைக் கல்லில் செதுக்கி வைப்பது மரபு. அந்தக் காட்சியை இந்தக் கோயிலில் இன்றும் பழமை மாறாத பொலிவோடு காண முடிகிறது. சிங்கம் சுமந்த தூண்கள், உருண்ட அமைப்புடைய தூண்கள், கலைநயம் மிக்க வீரர்கள் ஆயுதத்துடன் குதிரைமீது அமர்ந்த தூண்கள் என, காஞ்சி கைலாசநாதர் கோயில் அமைப்பிலும், மாமல்லபுரக் கோயில் அமைப்பிலும் உள்ளவை பார்த்து வியந்து மகிழத்தக்கவையாகும்.

*''மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாய்த்*
*தொடங்கினர்க்கு*

*வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க்கும்*
*பராபரமே''*

என்பது தாயுமானவர் வாக்கு. இந்த மூன்று சிறப்புக்களையும் ஒருசேரப் பெற்றது இந்தத் திருக்கோயிலாகும். திருமால், பிரமன் மற்ற தேவர்கள் முதலியோர் வழிபட்ட மூர்த்தி இந்த இறைவன் ஆதலின் மூர்த்திச் சிறப்பும், பிரமதேவனிடம் உபதேசம் பெற்று நைமிசாரிணிய முனிவர்கள் தவம் செய்தது போன்றவற்றால் தலச்சிறப்பும், அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு பயன்களையும் பெற உதவும் இஷ்ட சித்தித் தீர்த்தம் என்னும் திருக்குளம் அமைந்துள்ளதால் தீர்த்தச் சிறப்பும் ஆகிய முச்சிறப்புக்களையும் உடையது இத்திருக்கோயில்.



பழம் பெருமையும், புராணச்சிறப்பும் உடையதாக இக்கோயில் விளங்கினாலும் இக்கோயிலுக்கு என்று தனியே தேவாரம், திருவாசகம் முதலிய திருமுறைப் பாடல்கள் கிடைக்கப் பெறவில்லை. திருமுறை கண்ட சோழன் எனப் போற்றப்படும் இராசராசன் தில்லைத் திருக்கோயிலில் திருமுறைகளைக் கண்டெடுத்த போது அழிந்துபோன அளவற்ற ஓலைச்சுவடிகளில் இத்திருக்கோயிலுக்குரிய பதிகங்களும் அழிந்தனபோலும். (ஏனெனில் இக்கோயிலுக்கு அருகில் உள்ள திருவேகம்பம் என்னும் கோயில் திருமுறைப் பாடல்கள் பெற்றவை.) ஏழாம் நூற்றாண்டில் இக்கோயில் இருந்தமையைத் தண்டியலங்கார மேற்கோள் பாடல் சுட்டுவதால், இத்திருக்கோயில் தேவாரப் பாடல் பெற்று இருந்திருக்க வேண்டும் என்பது நிச்சயம்.

திரிபுராதிகளை அழித்த அவிர்சடைக் கடவுளான சிவபெருமான் ஒருமுறை ஐம்பெரும் பூதங்களையும், திருமால், பிரமன் முதலிய தேவர்கள் மற்ற சராசரங்களையும் அழித்துவிட்டு, இரவு பகலற்ற பெருவெளியில் உமாதேவியார் காணும்படி ஊழித்திருக்கூத்து ஆடினார். மீளவும் உலகைப் பழையபடியே படைக்க எண்ணினார். எல்லா உலகங்களும் அழிகின்ற காலத்திலும் அழியாது உள்ள காஞ்சிபுரத்தில் சோதி மயமான லிங்கத்தில் (கச்சபேசத்தில்) இறைவன் தாமே தோன்றித் தம் சக்தியால் உலகத்தில் உள்ள சராசரங்களையும் மாலயன் முதலிய தேவர்களையும் மீண்டும் படைத்து அருளினார். அந்த சோதிலிங்கத்தை வழிபட்டுப் பிரமன் படைப்புத் தொழிலை அடைந்தான். மற்றுமொருகால் ஒரு பிரமகற்பத்தில் தேவர்களும், அசுரர்களும் அமுதம் பெறுவதற்காக மந்தர மலையை மத்தாகக் கொண்டு திருப்பாற்கடலைக் கடைந்தனர். அப்போது சாய்ந்த மந்தர மலையைத் திருமால் ஆமை வடிவு கொண்டு தம் முதுகில் தாங்கி நிறுத்தி, அமுதம் கிடைக்குமாறு செய்தார். இதனால் அவர் கருவம் கொண்டு உலகம் அஞ்சும்படிக்

கடலைக் கலக்கினார். அதனால் அஞ்சிய தேவர்கள் சிவபெருமானைத் தஞ்சம் புகுந்தனர். சிவபெருமான் அவ்விடம் சென்று ஆமையின் தருக்கு அடக்கி, அந்த ஆமை ஓட்டினைத் தம் வெண்டலை மாலையில் நடுவில் கோர்த்து அணிந்து கொண்டார்.

ஆணவம் அழிந்த திருமால் தாம் செய்த குற்றம் நீங்க இச்சோதி லிங்கத்தை வழிபட்டு, நீங்காத சிவபக்தியும், வைகுந்த பதவியின் தலைமையும், தாம் பூசித்த சிவலிங்கம் அன்று முதல் கச்சப ஈஸ்வரர் (கச்சபம்: ஆமை) என்று பெயர் பெறவும் வரம்பெற்றார். அன்று முதல் இறைவனும் தலமரமாகிய முருக்க மரத்தினடியில் அமர்ந்து அருள்பாலிக்கிறார்.

இஷ்டசித்தீசம் என்னும் தனிக் கோயிலில் மேற்கு நோக்கிய சந்நிதி உள்ள சிவபெருமானை வழிபட்டு, ததீசி முனிவர் இறந்தவரை எழுப்பும் மிருத்யுசஞ்சீவினி என்னும் மந்திரத்தைப் பெற்றார். பிரமன் சரசுவதியுடன் பெருமானை வழிபட்டுப் படைப்பு ஆற்றலைப் பெற்றார். இக்கோயிலினுள் சரசுவதிக்குத் தனியே சந்நிதி உள்ளது. வீணையைக் கையிலேந்தி தாமரையில் அமர்ந்துள்ள கலைமகளின் கோலம் கண்ணுக்கு விருந்தாகும். தருமசித்தி, ஞானசித்தி, யோக சித்தி, வேதசித்தி, இஷ்ட சித்தி என்னும் ஐந்து சித்தித் தலங்கள் இத்திருக்கோயிலினுள் உள்ளன. மேலும் துர்க்கை, சூரியன், வயிரவர், ஐயனார், விநாயகர், ஆகிய ஐவரும் வழிபட்டுக் காவல் புரிகின்ற சிறப்பும் இத்தலத்துக்குண்டு. தவிர இத்திருக்கோயிலினுள் தென்மேற்கில் திருமால் வழிபட்ட பொய்யா மொழி விநாயகரும், வடமேற்கில் இஷ்ட சித்தீசமும், வடகிழக்கில் துர்க்கையும், தென்கிழக்கில் சூரியனும் விளங்க இறைவன் கச்சபேசன் நடுநாயகமாகக் காட்சி தருகிறார். மூலவர் விமானம் கருங்கல்லினால் ஆனது.

இத்திருக்கோயிலில் சூரிய வழிபாடும், சூரியனுக்குரிய ஞாயிற்றுக்கிழமையும் விசேடமாகும். இத்திருக்கோயிலில் மயூரசன்மன் என்னும் மன்னன் சூரிய சதகம் என்னும் நூலை இயற்றி, சூரியனை வழிபட்டு கண்ணொளி பெற்றான் என்பது வரலாறு. எல்லா ஞாயிற்றுக்கிழமைகளும் சிறப்புடையவை என்றாலும், கார்த்திகை மாதத்தில் வரும் ஞாயிற்றுக் கிழமைகள் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தவை. அந்தக் கிழமைகளில் இஷ்டசித்தி தீர்த்தத்தில் நீராடி, புது மண்சட்டியில் பச்சரிசி மாவுடன் வெல்லம் கலந்து பிசைந்து, ஓர் அகலில் நெய்தீபம் ஏற்றி, தேங்காய் உடைத்து வெற்றிலை, பூ, பழம் முதலியவற்றை அந்த மாவில் வைத்து



தலைமேல் சும்மாடு வைத்து அந்த மண் சட்டியைத் தாங்கிக் கோயிலை வலம் வருவர். இதனால் தலைவலி, காது குத்தல், காதில் சீழ் வடிதல், தலைக்குத்து போன்ற பிணிகள் நீங்கி இன்பம் பெறுவது இன்றும் நடைபெற்று வரும் உண்மையாகும். கார்த்திகை ஞாயிற்றுக்கிழமைகளில் இயலாமல் போகுமானால் அவர்கள் தவறாமல் மார்கழி மாதம் திருவாதிரை நாளன்று அந்த நேர்த்திக் கடனைச் செய்வது வழக்கம். இதனால் இக்கோயிலை மாவிளக்குக் கோயில் என்றும் கூறும் வழக்கம் உண்டு.

அருணகிரிநாதரின் பாடல் பெற்ற முருகன் இத்திருக்கோயிலில் உள்ளார். அருணகிரியாரும் இக்கோயிலைக் கச்சிக் கச்சாலை என்று கூறி முருகனை, ''கச்சிக் கச்சாலை மேவிய பெருமாளே'' என்று பாடுகிறார். சிவஞான முனிவர் தம் காஞ்சிப் புராணத்தில் இத்திருக்கோயிலின் சிறப்புக்களை விவரித்திருக்கிறார். கச்சியப்பரின் கந்த புராணமும் இக்கோயிலைப் புகழ்ந்துரைக்கிறது. யுகதேவதைகள் வழிபட்ட யுகேஸ்வரர், நான்கு திருமுகங்கள் அமைந்த சிவலிங்கத் திருமேனியாகிய சதுர்முகேஸ்வரர் போன்ற மூர்த்தங்கள் கோயிலுக்கு மேலும் சிறப்பைச் சேர்ப்பவை. பல்வகைப் புகழும் பெருமையும் கொண்ட பழம் பெரும் கோயில் கச்சிக்கச்சாலை எனப்படும் கச்சபேசுவரர் திருக்கோயிலாகும். அங்கு அமர்ந்தருள்புரியும் அழகம்மை (சுந்தராம்பாள்) உடனுறை கச்சாலை எம்மான் எல்லோருக்கும் நல்லருள் புரிபவன் என்பதைக் காஞ்சிப் புராணம் பின்வருமாறு கூறுகிறது.

''கச்சபேசன் தனைக் கும்பிடச் சென்றவர்
கண்டவர், கருதினர் யாவரும், ஒன்றி ஒன்றா
நிலை பெற்று மாறிலா முத்தி பெற்று உய்வரே''

- காஞ்சிப்புராணம்

கச்சிக் கச்சாலை எம்மானைக் கண்ணாரக் கண்டு சீரும் சிறப்பும் பெறுவோம்.

கலியுகம் பிறந்து 289ம் ஆண்டு ப்ரபவ வருடம், மார்கழி மாதம், க்ருஷ்ணபக்ஷ சதுர்த்தசி செவ்வாய்க்கிழமை கூடிய கேட்டை நக்ஷத்திரத்தில், சோழ நாட்டு திருத்தலமான புள்ளம் பூதங்குடிக்கு அருகில் உள்ள மண்டங்குடி என்கிற ஊரில் வசித்து வந்த ஒரு வைஷ்ணவருக்குப் பிள்ளையாக தொண்டரடிப் பொடி ஆழ்வார் வந்து அவதரித்தார். இவரது பெற்றோர் இவருக்கு விப்ரநாராயணன் என்றுதான் பெயரிட்டு வளர்த்து வந்தனர். இவரை பகவானின் வன மாலையின் அம்சம் என்று கூறுவர்.

இவரது தகப்பனார் இவருக்கு உரிய காலத்தில் வைதீக சமஸ்காரங்களைச் செய்து வைத்து, சிறு வயதிலேயே வேதசாஸ்திரங்களையும் கற்றுத் தந்தார். இளமையிலேயே எல்லா சாஸ்திரங்களையும் கரை கண்டுவிட்ட இவர் தீவிர நைஷ்டிக ப்ரம்மச்சர்யத்தை அனுசரித்து வந்தார், அரங்கனுக்குத் தொண்டு செய்து தன் காலத்தைக் கழிப்பதற்கு எண்ணினார். என்ன உபாயத்தினால் இறைவனைக் கவரலாம் என்று சிந்திக்கும் போது



# தொண்டரடிப்பொடி ஆழ்வார்

இந்திரா ஆராவமுதன்

"செண்பக மல்லிகையோடு செங்கழுநீர் இருவாட்சி
எண்பகர் பூவும் கொணர்ந்தேன் இன்று இவை சூட்டவாவென்று
மண்பகர் கொண்டானை ஆய்ச்சி மகிழ்ந்துரை செய்த இம்மாலை
பண்பகர் வில்லிப்புத்தூர்க்கோன் பட்டர்பிரான் சொன்ன பத்தே''.

(பெரியாழ்வார் திருமொழி 2-7-10)

என்ற பெரியாழ்வாரின் பாசுரம் அவர் நினைவுக்கு வந்து, அவரைப் போலவே இறைவனுக்குப் புஷ்பகைங்கர்யம் செய்ய ஆசைப்பட்டார். அழகிய நந்தவனம் அமைத்தார். செண்பகம், மல்லிகை, செங்கழுநீர், இருவாட்சி, மல்லிகை, பச்சைத் தமனகம், மரு, பாதிரி, புன்னை, குருக்கத்தி, கருமுகைப்பூ போன்ற பூக்களின் செடிகளைப் பயரிட்டு நீரூற்றி வளர்த்து வந்தார். தினமும் பூமாலைகளையும், துளசி மாலைகளையும் கட்டி எடுத்துக் கொண்டு போய் பெரிய பெருமாளுக்குச் சாற்றி அவரது அருளுக்குப் பாத்திரமாகி பேரானந்தமாக வாழ்ந்து வந்தார்.

அவரது வாழ்வில் ஒரு திருப்பம் ஏற்பட வேண்டிய நாள் வந்தது.

கரம்பனூர் என்று அழைக்கப்பட்டு வந்த இன்றைய உத்தமர்கோயில் என்கிற ஊரில், ஒரு தெய்வப் பெண்ணின் அம்சமாகப் பிறந்த பேரழகியான தேவதேவி என்ற ஒரு கன்னிகை வாழ்ந்து வந்தாள்.

அவள் தன் தமக்கை, தோழிமார்களுடன் உறையூர் சென்று சோழ அரசனின் முன்னிலையில் ஆடல், பாடல்களை நிகழ்த்திவிட்டு, பெரும் பரிசுப் பொருட்களுடன் தன் ஊருக்குத் திரும்பி வந்து கொண்டிருந்தாள்.

வழியில் விப்ரநாராயணரின் அழகிய நந்தவனத்தில் தங்கி சற்று இளைப்பாறினாள். அவ்வமயம் பூக்களைப் பறிக்க வந்த விப்ரன் இவர்கள் இருப்பதையே சற்றும் கவனியாமல் தன் காரியத்திலேயே கண்ணும் கருத்துமாக இருந்தார்.

துளசி மாலை அணிந்து பன்னிரண்டு திருமண் காப்புடன் தேஜஸுடன் இருந்த விப்ரனைப் பார்த்து தேவதேவி அதிசயித்தாள்.

உலகிலேயே தன்னுடைய அழகுக்கு ஈடாக யாருமே இருக்கமுடியாது என்ற கர்வம் கொண்டவள் அவள். விப்ரன் தன்னைக் கவனிக்கவில்லையே என்று பொருமிய அவள், தன்னுடைய அழகை ஏறெடுத்துக்கூட பார்க்காத ஒரு ஆண் இருக்கமுடியுமா என்கிற போதை அவள் தலைக்கு ஏறியது, மமதை கண்ணை மறைத்தது. 'யார் இவர்'' என்று தன் தமக்கையிடம் வினவினாள். அதற்கு அவள், ''அரங்கனுக்குப் புஷ்பத் தொண்டு செய்து வரும் விப்ரநாராயணன் என்றும் மஹா வைராக்யமான ப்ரம்மச்சாரியான அவர் நம்மை போன்றவர்களையெல்லாம் ஏறெடுத்துக் கூட பார்க்க மாட்டார்'' என்றும் விபரம் சொன்னாள்.

அதைச் சவாலாக எடுத்துக் கொண்ட தேவதேவி, ''அவரை நான் வசப்படுத்திக் காட்டா விட்டால் உனக்கு 6 மாதம் தாசியாக இருப்பேன்'' என்று சபதம் செய்தாள்.

அவள்தமக்கையும் ''நீஅவரைவசப்படுத்தி விட்டால் நான் உனக்கு 6 மாதம் தாசியாக இருப்பேன்'' என்று பதிலுக்குச்சூளுரைத்தாள்.

மளமளவென்று தன் அலங்காரங்களை யெல்லாம் களைந்து தன் தமக்கையிடம் கொடுத்து அனுப்பினாள். ஒரு சாதாரணப் பெண்ணைப் போல உடை உடுத்திக் கொண்டாள். மிகவும் சோகமாக முகத்தை வைத்துக் கொண்டு விப்ரனைச் சென்று வணங்கினாள்.

''நீயார்அம்மா?'' என்று அவர்வினவினார்.

''முன் செய்த தீவினைப் பயனால் நான் ஒரு தாசி குலத்தில் பிறந்து விட்டேன். அத்தொழிலில் ஈடுபட்டு நிறைய பணம் சம்பாதித்துத் தரவேண்டுமென என் தாயார் வற்புறுத்துகிறாள். மேலும் பாபம் செய்ய விரும்பாததால், அவளிட மிருந்து தப்பி வந்து விட்டேன். பெருமாளுக்குத் தொண்டு செய்யும் உம்மிடம் குற்றேவல் செய்து புண்ணியம் சம்பாதிக்க விரும்புகிறேன். எனக்கு ஆதரவு தர வேண்டுமாய்க் கேட்டுக் கொள்கிறேன்'' என்று கல்லும் கரையும் வண்ணம் உருக்கமாகக்கூறினாள்.

விப்ரனும் அவள் மேல் பச்சாத்தாபம் கொண்டு, அவளை அங்கேயே ஒரு குடிலில் தங்க அனுமதி தந்து, அவள் தாயிடம் திரும்ப போக வேண்டாமென்றும் கூறி சாந்தப்படுத்தினார். பெருமாளுக்கு அமுது செய்த அன்னத்தை தான் உண்டு விட்டு மிகுதியை அவளுக்கும் கொடுத்து வந்தார்.

தேவதேவியும் கொஞ்சம் கொஞ்சமாக விப்ரனைத் தன் பக்கம் ஈர்த்துத் தன் வலையில் விழச் செய்தாள். சிலகாலம் கழிந்தபின் உத்தமர் கோயிலுக்குத் திரும்பச் சென்று விட்டாள்.

அவள் பிரிவைத் தாங்க மாட்டாத விப் நாராயணன் இறைத்தொண்டை அறவே மறந்தார். அவளுடைய ஞாபகம் அவனை வருத்தியதால் அவள் வீட்டிற்குச் சென்றார் பணம் இல்லாத அவரை தேவதேவியின் தாய் உதாசீனப்படுத்தினாள். இருந்தும் அவன் வீட்டு வாசலிலேயே முடங்கிக் கிடந்தார்.

பிராட்டி பெருமாளிடம் புருஷகாரம் பண்ணினாள். பெருமாளும் உடனே தன் சன்னதியில் உள்ள ஒரு பொன்வட்டிலை எடுத்துக் கொண்டுபோய் தேவதேவியின் தாயிடம் சென்று, ''என் பெயர் அழகிய மணவாளன். என் தோழனான விப் நாராயணன் என்னை இங்கு அனுப்பி இந்த பொன்வட்டிலைத் தரச்சொன்னான்'' என்றார்.

''சரி, அப்படியானால் அவரை உள்ளே வரச் சொல்லும்'' என்று தாய் சொல்ல பெருமாளும் விப்ரநாராயணனிடம் சென்று தேவதேவி உம்மை வரச் சொன்னாள்'' என்று சொல்லி விட்டு மறைய விப்ரனும் உகப்புடன் உள்ளே சென்றார்.

மறுநாள்காலை சன்னதியைத் திறந்த அர்ச்சகர் பொன்வட்டிலைக் காணாமல் சோழ அரசருக்குத் தெரிவிக்கராஜஊழியர்கள்தேடஆரம்பித்தனர்.

தேவதேவியின் வீட்டில் பொன்வட்டில் இருப்பதை அவளுடைய பணிப்பெண் ஒருத்தி காட்டிக் கொடுத்தாள். உடனே சேவகர்கள் வந்து தேவதேவியின் வீட்டை சோதனையிட்டனர்.

சேவகர்கள் வட்டிலைக் கைப்பற்றியதுடன் தேவதேவியையும் விப்ரநாராயணனையும் அரசன் முன்ட கொண்டுபோய் நிறுத்தினர்.

அரசன் தேவதேவியை விசாரித்தார்.

''இது பெருமாளுடைய வட்டில் என்று எனக்குத் தெரியாது. விப்ரநாராயணரின் தோழன் கொண்டு வந்து கொடுத்ததாக என் தாய் கூறியது மட்டும் தனக்குத் தெரியும்'' என்று தேவி கூறினாள்.

அடுத்து அரசன் விப்ரநாராயணனைக் கேட்டதற்கு, ''தனக்கு ஒரு தோழனும் கிடையாது. தான் பொன்வட்டிலைக் கண்டதும் இல்லை'' என்று பதிலளித்தார்.

அரசன் தேவதேவிக்கு அபராதத் தொகையைக் கட்டும்படி சொல்லிவிட்டு, விப்ரனை காவலில் வைக்கச் சொன்னார்.

அன்று இரவு பெருமாள் சோழ அரசனின் கனவில் சென்று, ''விப்ரநாராயணன் பேரில் எந்தத் தவறும் இல்லை. அவனுடைய முந்தைய வினையின் பயனைக் கழிப்பதற்காகவே அவருக்கு திருட்டுப் பட்டம் கட்டப்பட்டதென்றும், தாம் தான் வட்டிலைச்

## ஸ்ரீ சடாரியின் மஹிமை

வைணவத் திருக்கோயில்களுக்குச் செல்லும் ஒவ்வொருவரும் அனைத்து சந்நிதிகளிலும் தீர்த்தம், திருத்துழாய், மஞ்சள் காப்பு, குங்குமம் முதலிய பிரசாதங்களைப் பெற்றுக் கொள்வதுடன் ஸ்ரீசடாரியை சிரசில் கொண்டால்தான் அந்தந்தச் சந்நிதிகளில் வழிபாடு பூர்த்தியானதாகக் கருதுவர்,

பாதுகையே ஸ்ரீசடாரி
ஸ்ரீசடாரியே ஆழ்வார்

பாதுகை, ஸ்ரீசடாரி, ஆழ்வார்
எல்லாம் ஒன்றே

ஸ்ரீ சடாரி மூலமே ஸ்ரீய: பதியான பகவான் திருவடிகளில் நம் தலையைச் சமர்ப்பிப்பது சாத்தியம் ஆகும்.

கொண்டு தேவதேவியின் தாயிடம் தந்ததாகவும், விப்ரநாராயணனுக்கு சிறைவாசம் அனுபவிக்கும்படி செய்ததாகவும் சொன்னார். அதனால் அவரை விடுவித்து திருமால் கைங்கர்யத்துக்கு அனுப்பும்படியும், தேவதேவியும் அபராதத் தொகை கட்டவேண்டாமென்று அரசன் சொல்லவேண்டும்'' என்றும் உணர்த்தினார்.

அரசனும் வியப்புடன் பகவானின் கட்டளையை மேற்கொண்டு, விப்ரநாராயணனைச் சிறையிலிருந்து அழைத்து வரச் செய்து, உரிய உபசாரங்களுடன் கோயிலுக்கு அனுப்பி வைத்தார்.

விப்ரனும் தான் செய்த இழிசெயலை நினைத்து வருந்தி தாசியுடன் கூடியிருந்ததற்குப் பிராயச்சித்தமாக அடியார்களின் ஸ்ரீபாத தீர்த்தத்தைப் பருகிப் பரிசுத்தம் செய்து கொண்டார். தன்னுடைய பெயரையும் தொண்டரடிப்பொடி என்று மாற்றிக் கொண்டார்.

45 பாசுரங்கள் கொண்ட திருமாலை, 10 பாசுரங்கள் கொண்ட திருப்பள்ளியெழுச்சியை இயற்றினார்.

திருமாலை ப்ரபந்தத்தை எல்லாரும் கற்று திருமாலின் பெருமையை அறிய வேண்டும் என்கிற அர்த்தத்தில்

''திருமாலை அறியாதார்
திருமாலை அறியார்''

என்ற சொற்றொடர் ஏற்பட்டது. இது தொண்டரடிப் பொடியாருக்கு கொடுக்கப்பட்ட மிகப் பெரிய கௌரவம் என்று சொல்லலாம்.

திருமாலையில் உள்ள ஒரு சில பிரசித்தி பெற்ற பாடல்களைக் காண்போம்.

''பச்சைமா மலைபோல் மேனி
பவளவாய்க் கமலச் செங்கண்
அச்சுதா ! அமரரேறே! ஆயர்தம்
கொழுந்தே! என்னும்
இச்சுவை தவிர யான் போய்
இந்திரலோகம் ஆளும்
அச்சுவை பெறினும் வேண்டேன்
அரங்கமா நகருளானே!'' (2)

''வேதநூல் பிராயம் நூறு மனிசர் தாம்
புகுவரேலும்
பாதியும் உறங்கிப் போகும் நின்றவிப்
பதினையாண்டு
பேதை பாலகனதாகும் பிணிபசி மூப்புத்
துன்பம்
ஆதலால் பிறவிவேண்டேன் அரங்கமா
நகருளானே!'' (3)

''குடதிசைமுடியை வைத்துக் குணதிசை
பாதம் நீட்டி
வடதிசைபின்பு காட்டித் தென்திசை
இலங்கை நோக்கி
கடல் நிறக் கடவுளெந்தை அரவணைத்
துயிலுமா கண்டு
உடலெனக்கு உருகுமாலோ ! என்
செய்கேன்? உலகத்தீரே!'' (19)

''மனத்தில் ஓர் தூய்மையில்லை வாயில்
ஓர் இன்சொலில்லை
சினத்தினால் செற்றம் நோக்கித் தீவிளி
விளிவன்வாளா
புனத்துழாய் மாலையானே ! பொன்னி
சூழ் திருவரங்கா!
எனக்கு இனிக் கதியென் சொல்லாய்
என்னையாளுடைய கோவே!'' (30)

அவரின் அடுத்த பிரபந்தமான திருப்பள்ளியெழுச்சியைக் கேட்டுவிட்டுத் தான் இன்றைக்கும் அரங்கனின் துயில் கலைகிறது என்பதை நாம் கண்கூடாகப் பார்த்து வருகிறோம்.

தொண்டரடிப் பொடிஆழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கை ஆழ்வார் மூவரும் சமகாலத்தவர். கலியன் அரங்கனுக்கு மதில் கட்டும் போது தொண்டரடிப்பொடி ஆழ்வாரின் நந்தவனத்துக்குச் சேதம் ஏற்படாமல் வளைத்து கட்டியதாகப் பிரசித்தம் தொண்டரடிப் பொடிஆழ்வார் திருவரங்கத்திலேயே பரமபதித்தார்.

தேவதேவியும் அவர் பெருமையை உணர்ந்ததுடன், தன் சொத்தையெல்லாம் அரங்கனுக்குச் சமர்ப்பித்துவிட்டு கோயில் தொண்டில் தன் காலத்தைக் கழித்தாள்.

# வடிவுறு மூப்பு!

புலவர் மு.இராசரத்தினம்

திருத்தொண்டர்புராணம் என்னும் பெரிய புராணம் அறுபத்துமூன்று அருளாளர்கள் வரலாற்றைக் கூறும் அமுதநூல். சேக்கிழார் என்னும் தெய்வப்பாக்கிழார் பக்திச்சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய பெருமைக்குரியது.

வாய்ப்பான இடங்களில் எல்லாம் தமிழின் சிறப்பு, தமிழ்ப்பண்பாட்டின் சிறப்பு, அரசியல் சிறப்பு, ஆட்சிச்சிறப்பு, தொழிலின் சிறப்பு, தூய தொண்டின் சிறப்பு, விருந்தோம்பலின் சிறப்பு, வீரத்தின் சிறப்பு என்று பல்வேறு சிறப்புக்களையும் பேசுகிறார் சேக்கிழார்.

சொல் நயம், பொருள் நயம், அணி நயம் என்று அனைத்து நயங்களையும் பேசுவதில் வல்லவர் சேக்கிழார்.

தனியடியார்களில் முதலில் பேசப் பெறுபவர் திருநீலகண்டர். இனிய இல்லற வாழ்வினர். மட்பாண்டம் செய்து விற்று வாழும் வாழ்க்கையர். எல்லாம் வல்ல சிவபரம்பொருளிடத்து எல்லையில்லா பக்தி பூண்டவர். அவன் அடியவர்கட்குத் திருவோடு அளித்து மகிழும் தொண்டினைச் செய்து வந்தார்.

ஒரு நாள் மனச் சலனத்துக்கு ஆளாகிவிட்டார். அதனால் ஒரு பரத்தையின் பால் சென்றுவிட்டார். இதனைச் சேக்கிழார் பெருமான்.

**''அளவிலா மரபின் வாழ்க்கை**
**மட்கலம் அமுதுக் காக்கி**
**வளரினம் திங்கட் கண்ணி**
**மன்றுளார் அடியார்க் கென்றும்**
**உளமகிழ் சிறப்பின் மல்க**
**ஓடளித் தொழுகும் நாளில்**
**இளமைமீ தூர இன்பத்**
**துறையினில் எளியர் ஆனார்**
**எனக் குறிப்பிடுகிறார்.''**

பரத்தையின் பால் சென்றுவிட்டார் என்பதை இன்பத் துறையில் எளியர் ஆனார் எனச் சேக்கிழார் பேசுவது நனி நாகரிகத்தின் மணிமுடி.

குற்ற உணர்வுடன் வீட்டிற்கு வந்தார் நாயனார். அவர் செயல் அவர் தம் மனைவியார்க்குத் தெரிந்து விட்டது. என்றாலும் அவர் ஒன்றும் சொல்லவில்லை. முகத்தில், சொல்லில், செயலில் எவ்வித மாற்றமும் அவர்காட்டவில்லை.

நாயனாரின் அச்சம் அகன்றது, மனைவியாரைத் தொடும் நினைவோடு அருகில் சென்றார். அப்போது **''எம்மைத் தீண்டுவீராகில் திருநீலகண்டம்''** என்று ஆணையிட்டு அகன்றார் அம்மையார்.

**''ஆதியார் நீல கண்டத்து**
**அளவுதாம் கொண்ட ஆர்வம்**
**பேதியா ஆணை கேட்ட**
**பெரியவர் பெயர்ந்து நீங்கி**
**ஏதிலார் போல நோக்கி**
**எம்மை என் றதனால் மற்றை**
**மாதரார் தமையும் என்றன்**
**மனத்தினும் தீண்டேன்'' என்றார்.**




தெய்வச் சேக்கிழார்
குன்றத்தூர்.

அம்மையாரின் ஆணை கேட்ட நாயனாரின் உள்ளமும் உடலும் அதிர்ந்தது. திருநீலகண்டத்தின் மீது தீராக் காதல் கொண்ட நாயனார் தம் மனைவியார் என்னைத் தீண்டுவீராகில் திருநீலகண்டம் எனச் சொல்லாது 'எம்மைத் தீண்டு வீராகில் திருநீலகண்டம்' எனப் பன்மையாற் ஆணையிட்டதை நினைந்தார்.

எனவே உன்னை மட்டுமல்லாது, வேறு எந்தப் பெண்ணையும் மனதாலும் தீண்டமாட்டேன் என்று கூறி ஒதுங்கிக் கொண்டார்.

மிகச் சிறிய வயதில் மிகப் பெரிய சபதம் எடுத்துக் கொண்ட நாயனாரை 'பேதியா ஆணை கேட்ட பெரியவர்' என உச்சிமேல் வைத்து மெச்சுகிறார் சேக்கிழார் பெருமான்.

வயதோ இருபது! இருக்கும் வீடோசிறியது! ஒருவரை ஒருவர் தொடாது வாழ்கிறார்களாம். நாயனாரும்அவர்தம் மனைவியாரும் இப்படி இவர்கள் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள் என்பது உற்றார் பெற்றார்க்கும் தெரியாதாம்.

அதுமட்டுமா? அடுத்த வீட்டுக்காரர்களுக்குக் கூடத் தெரியாமல் வாழ்ந்தார்களாம் 'அற்புறுபுணர்ச்சியின்மை அயலறியாமல் வாழ்ந்தார்' எனப் பேசுகிறார் சேக்கிழார் பெருமான்.

கணவன் மனைவியரிடையே கருத்து வேறுபாடு வந்து விட்டால் வீடுகளில் என்ன வெல்லாம் நடக்கின்றது என்பதைப் பார்த்திருக்கிறோம். படித்திருக்கிறோம், கேட்டிருக்கிறோம்.

இன்று குடும்பங்களின் நிலையை நினைக்கும் போதுதான் அன்று திருநீலகண்டரும் அவர்தம் மனைவியாரும் வாழ்ந்த வாழ்க்கையின் அருமையை நம்மால் தெளிவாக உணர முடிகிறது.

'செயற்கரிய செய்வர் பெரியர்' என்னும் குறளுக்கு எடுத்துக்காட்டான வாழ்க்கை அல்லவா நாயனார்தம்வாழ்க்கை.

இளமையைத் துறந்து ஓராண்டல்ல, ஈராண்டல்ல பல ஆண்டுகள் வாழ்ந்தார்கள். அதாவது முதுமை அடையும்வரை வாழ்ந்தார்களாம்.

**''இளமையில் மிக்கு ளார்கள்**

**இருவரும் அறிய நின்ற**

**அளவல்சீர் ஆணை போற்றி**

**ஆண்டுகள் பலவும் செல்ல**

**வளம்மலி இளமை நீங்கி**

**வடிவுறு மூப்பு வந்து**

**தளர்வொடு சாய்ந்தும் அன்பு**

**தம்பிரான் திறத்துச் சாயார்''**

எனச் சேக்கிழார் பெருமான் பேசும் அழகே அழகு! இதில் **வடிவுறுமூப்பு என்னும் சொல்தான்** சிந்தைக்கு விருந்து படைக்கும் சிறந்த சொல்லாகும்.

எல்லாரும் இளமையைத்தான் அழகு உடையது என்பார்கள். சேக்கிழார் பெருமானோ முதுமையை அழகுடையது என்றார்.

முதுமை எப்படி அழகாய் இருக்கும்- கேட்கத் தோன்றுகிறது அல்லவா நமக்கு? சிந்தனை விரிகிறது. சேக்கிழார் பெருமானின் சிறப்புப் புரிகிறது.

**வாழைக்காயினும்வாழைப்பழம் அழகுதானே!**

**மாங்காயினும் மாம்பழம் அழகுதானே!**

**எலுமிச்சங்காயினும் எலுமிச்சம் பழம் அழகு தானே!**

அதுபோல முதுமையால் பழுத்த திருநீலகண்டர் அழகாய்த் தெரிகின்றாராம். அதனால் தான் சேக்கிழார் பெருமான் திருநீலகண்டருடைய முதுமையை வடிவுறுமூப்பு என்று குறிப்பிட்டார்போலும்.

முதுமைக்கு முடி சூட்டி அழகு பார்க்கும் சேக்கிழார் பெருமானின் 'வடிவுறுமூப்பு' என்பதில் அமைந்துள்ள சொல்நயமும் பொருள் நயமும் பெரிய புராணத்தை இன்னும் ஆழமாக ஆய்ந்து கற்க நம்மைத் தூண்டுகிறது அல்லவா?



**திருநீலகண்டர்**

# கலங்காமல் காத்த விநாயகர்

''திருப்புகழ் மாமணி'' மு.அருணகிரி

அடியேன் ஆலங்குடி எனும் குருஸ்தலத்துக்கு செல்ல நேர்ந்தது. ஆலயத்துக்கு, எதிரேயுள்ள கணபதியை துதி செய்யலானேன். இக்கணபதிக்கு ''கலங்காமல் காத்த கணபதி'' எனும் திருநாமம் பெயரிட்டுள்ளதை சிறிது சிந்திக்கலானேன். ஓர் இடத்தில் அமர்ந்து, கணபதிக்கு ஏன் இந்த நூதனப் பெயர் வழங்கப்படுகிறது என என் மனம் அசைபோட ஆரம்பித்தது. ஓதுவாமூர்த்திகளின் வாயிலாக வரலாற்றுச் செய்திகளையும் இத்தலம் பாடல் பெற்ற தலம் என்பதையும் அறியலானேன்.

கயமுகாசுரன் எனும் கொடிய அரக்கன் வாழ்ந்த நாளில் தேவர்களையும், முனிவர்களையும், தன் தவப்பயனால் இன்னல் விளைவிக்கலானான். இவன் பெயரைக் கேட்டாலே நடுங்குவர். நேரில் காண நேர்ந்தால் தங்களுடைய மேல் துண்டை இடுப்பில் கட்டிக் கொண்டு இரு கையால் இடம் மாறிச் செவிகளில் பொருத்தித் தோப்புக் கரணமிட்டு பின்னர் தலையில் குட்டிக் கொண்டும் வணக்கம் செலுத்தலாயினர்.


அருள்மிகு கலங்காமற் காத்த விநாயகர்

இவனது கொடுமையைத் தாளாத தேவர்களும், முனிவர்களும் ஆலயத்தில் வீற்றிருக்கும் கணபதியிடம் பயபக்தியோடு துதி செய்து, கொடிய அசுரனின் துன்பங்களின்றும் உய்வு பெறக் கருணை புரிய வேண்டும் என வேண்டினர்.

அவர்களது வேண்டுகோளை ஏற்று, கணபதியே தனது தந்தத்தால் அசுரனின் மார்பைப் பிளந்தார். மாண்டவன் போலாகி, தனது கூடு விட்டுக் கூடு பாயும் வகையில் கயமுகாசுரன் (பெருச்சாளியாகி) மறுமுறை தாக்க வந்தான். கணபதி அப்பெருச்சாளியின் முதுகில் தாவி ஏறி வீற்றிருந்து என்னை சுமக்குதி என்றார். அன்று தொட்டு கணபதிக்கு பெருச்சாளியாக கயமுகாசுரன் தாங்கி வரலானான். இதனைக் குறித்து கந்தபுராணம் (6.14.252)

> ''நீநம்மை சுமத்தி, என்று மேக்குயர் பிடரில்
> தாவி வீற்றிருந்தூர்தல் உற்றான்''
> (6.14.252)

என்று கூறுகிறது.

> ''கைவேழமுகத்தவனைப் படைத்தார் போலும்
> கயாசுரனை அவனாற்கொல் வித்தார்போலும்''
> (6-53-40)

என்று அப்பர் தேவாரம் கூறி உள்ளது.

கயமுகாசூரனைக் கணபதி வதம் செய்ததும்,அடியார்கள் யாவரும் ஒன்று கூடி மகிழ்ச்சி பொங்க ஆரவாரம் செய்து, ஆலங்குடியில் வீற்றிருக்கும் கணபதியைப் போற்றிச் செய்து வணங்கும் முறையினை வேண்டினர். ஏனைய தெய்வங்களை வணங்கும் பாணியிலிருந்து மாறுபட்டு முன்னம் கயமுகாசுரானைக் கண்டதும் வணங்கி வந்த பாணியிலேயே தன்னையும் வணங்கி வர அடியார்களுக்கு அருள் பாலித்தார். இதனடிப்படையிலேயே ஆலங்குடியில் வீற்றிருக்கும் விநாயகருக்கு ''கலங்காமல் காத்த விநாயகர்'' எனும் திருநாமம் வழங்கப்பட்டது.

கயமுகாசுரனை வணங்கி வந்த பாணியிலேயே விநாயகப் பெருமானும் தன்னையும் வணங்கி வர அடியார்களுக்கு அருளிச்செய்தார்.

கயமுகாசுரனாகிய பெருச்சாளியின் மேல் விநாயகப் பெருமான் அமர்ந்த நிலையில் காட்சி தருவதை அருணகிரியார் தாம் பாடிய

கந்தரனுபூதியில் துவக்கத்திலேயே.

''அம்பரிவேல் அணிசேவலெனப்

பாடும்பணியே பணியா, யருள்வாய்

தேடும் கயமாமுகனைச் செருவில்

சாடும் தனியானை''

எனப் பாடியுள்ளது கவனிக்கற்பாலது.

நம் முன்னோர்கள் அனைத்து மூர்த்திகளையும் ஒரே பாணியில் வணங்க வழிவகுத்த போதிலும், மாறாக வினாயகரை மட்டும் வணங்கும் விதத்தினை குறித்து அருணகிரியார் தெள்ளத் தெளிவாக திருப்புகழில் ''நினது திருவடி'' எனத் துவங்கும் பாடலில் 3வது 4வது அடியில் பாடியுள்ளது மிகவும் போற்றத்தக்கதாகும். பாடலைப் பார்ப்போம்.

''மனது மகிழ்வோடு தொட்டக்கரத்
தொரு,
மகரலநிதி வைத்ததுதிக்கர
வளருகரிமுக, ஒற்றை மருப்பனை-
வலமாக
மருவுமலர் புனை தொத்திர சொற்கொடு
வளர்கை குழைபிடி தொப்பண
குட்டொடு
வனஜபரிபுர பொற்பத அர்ச்சனை
-மறவேனே''

என்பதாகும். இது போன்று வேறு எவரும் பாடியுள்ளதாகக் குறிப்புகள் காணவில்லை.

இத்தலத்தில், பூளைச் செடிகள் காடாக வளர்ந்துள்ளதால், பூளை வனம் என வழங்கலாயிற்று. பின்னாளில் ஆலங்குடி என மருவி வழங்கப்பட்டது.

இத்தலம், கும்பகோணத்திலிருந்து 17 கி.மீ. தூரத்தில் மன்னார்குடி செல்லும் பாதையில் அமைந்துள்ளது. பேருந்து வசதியுள்ளது. கலங்காமல் காத்த விநாயகர் நம்மையும் கலங்காமல் காத்தருள்வார்.

# புண்ணியம் அது



பொருளற்ற வாழ்வில்பல னொன்றும் இல்லை
அருளற்றால் புண்ணியம் இல்.

பொருளீட்டின் நல்ல பலனுண்டு; வாழ்வில்
அருளீட்டின் உண்டு பயன்.

அருட்பாட்டில் உள்ளதுதான் வாழ்வாகும்;
மற்ற பொருட்பாட்டில் இல்லை அது.

அருட்திறன் கூட்டிடும் வாழ்வு; பின்னரங்கே
பொருட்திறன் கூட்டாது காண்.

பொருள்பட வாழ்தல் எளிதாம்; அதனின்
அருள்பட வாழ்தல் அரிது.

உருப்பெற வேண்டிடின் வாழ்விலோர் நன்மை
அருள் ஒன்றே கூட்டும் சிறப்பு.

கூடுதல் சக்தியால் கூடும்அருள் வெள்ளத்தால்
கோடிகோடி புண்ணியம் உண்டு.

நாடியே தேடிடின் ஓடியே வந்திடும்
தேடிய செல்வம் இறை.

பாடிப் புகழ்ந்து முழுதும் சரணடைந்தால்
ஓடோடி வந்து விடும்.

கூடிய செல்வமாய்த் தேடியே வந்திடும்
வாடாப் பயிர்போல் செழித்து.

அருட் கவிஞர் இரா. செல்வராசனார்
- திரு அருட் குறள்

# ஆவிக்கோர் பற்றுக்கொம்பு



முனைவர் டி.எஸ்.ராமஸ்வாமி

நம்மாழ்வார் அருளிய திருவாய்மொழியில் இறைத் தத்துவங்கள் ஏராளம். ஆழ்ந்து நோக்கின், அதில் இல்லாத தத்துவங்களே இல்லை எனலாம்.

**கூவிக்கொள்ளாய்வந்தந்தோ!**
**என்பொல்லாக் கருமாணிக்கமே**
**ஆவிக்கோர் பற்றுக்கொம்பு**
**நின்னலாலறிகின்றிலேன்யான்...**
**(10-10-3)**

உயிர், உடல், கடவுள் என்கிற மூன்று தத்துவங்களுக்குள்ளே எல்லாமே அடங்கிவிடும்.

இதையே சித், அசித், ஈசுவரன் என்கிற 'தத்வத்ரயம்' என்று கூறுவர்.

உடலுக்கு பற்றுக்கோலாக மனைவி (அல்லது கணவன்), மக்கள், இன்னும் பலபல 'அசித்து'க்கள்.

உயிரின் பற்றுக்கோலாக இருப்பவன் இறைவன்,

உயிர் இறைவனைப் பற்றாதபோது, தேகத்தின் ஆட்சி வலுப்பெற்று, மனிதன், ஐம்பெரும் பகைவர்களாக இருக்கும் ஐம்புலன்களுக்கு ஆட்பட்டு, சம்சாரம் என்கிற ஆழ்கடலில் மூழ்கி, தத்தளித்துத் திண்டாடித் திணறிப் போகிறான்.

உயிர் (ஆவி, ஆத்மா) எப்படி இறைவனைப்பற்ற முடியும்?

முதல் வழி : சிறிதும் இடைவெளியின்றி, தொடர்ந்து இறைவனிடம் பக்தி செலுத்துவது. அதாவது, அவனையே நினைத்து தியானம் செய்து கீதையில் பகவான் அருளிய பக்தியோகத்தைச் சரிவரச் செய்வது. இது மிகச்சிறந்த உபாயமாயினும் எல்லோராலும் செய்ய இயலாது. மிகமிகச் சிலரே இந்த யோகத்தைச்செய்ய முடியும்.

ஒரு தாய், தன் மகள் இறைவனை நினைத்துத் துடிப்பதை ஆழ்வார் எவ்வளவு அழகாகக்கூறுகிறார்!

**கங்குலும் பகலும் கண்துயில் அறியாள்**
**கண்ணநீர் கைகளால் இறைக்கும்,**
**சங்குசக்கரங்கள் என்றுகை கூப்பும்**
**'தாமரைக் கண்' என்றே தளரும்,**
**'எங்ஙனே தரிக்கேன் உன்னைவிட்டென்னும்**
**இருநிலம் கைதுழாவிருக்கும்,**
**செங்கயல் பாய்நீர்த் திருவரங்கத்தாய்!**
**இவள்திறத்து என்செய்கின்றாயே?**

மற்றொரு இடத்தில் பக்தி முற்றிக் கதறுகிறார்.

**ஆடியாடி அகம்கரைந்து, இசை**
**பாடிப்பாடிக் கண்ணீர்மல்கி, எங்கும்**
**நாடி நாடி நரசிங்கா என்று,**
**வாடி வாடும் இவ் வாணுதலே.**
**(2-4-1)**

பரபக்தி,, பரஞானம், பரமபக்தி என்கிற மூன்று வெவ்வேறு நிலைகளில் ஆழ்வார் இறைவனை 'சிக்கெனப் பற்றி தன் பக்தியின் முதிர்ச்சியை வெளிப்படுத்துகிறார்.

ஆனால், சாமான்யர்களாகிய நாம் ஆழ்வாரின் பக்தி நிலையை எட்ட முடியுமா?

இறைவனிடம் பற்றுக் கொள்ள இரண்டாவது வழி, அவனை முழுமையான சரணாகதி அடைவதே.

தேர்த் தட்டிலே கண்ணன் அர்ஜுனனுக்கு கீதோபதேசம் செய்யும்போது,

**ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் ஸரணம் வ்ரஜ!**
**அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மாசுச**

என்று அருளிச் செய்கிறார். ''(எதுவும் மோட்சம் தராது என்பதால்) எல்லாவற்றையும் விட்டுவிட்டு என்னையே புகலாகப் பற்று'' என்று உத்தரவிடுகிறார்.

**ஆழ்வாரும் சிறப்பாக அருளிச் செய்கிறார்.**

**'அகல கில்லேன் இறையும்' என்று அலர்மேல் மங்கை யுறைமார்பா,**
**நிகரில் புகழாய்! உலகமன்று உடையாய்! என்னை ஆள்வானே,**
**நிகரில் அமரர் முனிக்கணங்கள் விரும்பும் திருவேங்கடத்தானே,**
**புகலொன்றில்லா அடியேனுன் அடிக்கீழமர்ந்து புகுந்தேனே.**
**(6-10-10)**

ஆனால் சரணாகதி என்பது அவ்வளவு எளிதான செயலல்ல. சரணாகதி செய்யும் தகுதி பெற இரண்டு நிபந்தனைகள்.

முதலில், எல்லாவற்றையும் விட்டு விட்டு அவனையே பற்ற வேண்டும். இது சாத்தியமா? நாம் எதையும் விட்டு விடத் தயாராய் இல்லை, ஐம்புலன்களின் தாண்டவங்களைக் கட்டுப்படுத்த முயற்சியும் செய்வதில்லை. இறைவனைப் பற்ற வேண்டும் என்ற விருப்பம் எப்படி ஈடேறும்?

இரண்டாவதாக, ''எனக்கு வேறு கதியில்லை, நீயே கதி'' என்ற உறுதியுடன் - மஹாவிசுவாசத்துடன் - அவன் திருவடிகளிலே விழ வேண்டும்.

ஆனால், இறைவனின் அருளை மட்டும் நம்பாமல், நம் புத்தியிலே உதிக்கும் பலவித மாற்று சிந்தனைகளால் குழம்பிப் போய், அரைகுறை நம்பிக்கையுடன் அவனை வணங்குகிறோம் - சில அற்ப பலன்களை அடைவதற்காக.

ஆக, சரணாகதி செய்யவும் நாம் தகுதியற்று இருக்கிறோம்.

ஈசுவரனைப் பற்ற மூன்றாவது வழி கைங்கர்யம் அதாவது தொண்டு செய்தல்.

ஆழ்வார் அருளுகிறார்

**...தொண்டே செய்து என்றும் தொழுது வழியொழுக,**
**பண்டே பரமன் பணித்த பணிவகையே.**
*(10-4-9)*

எம்பெருமானுக்குத் தொண்டு செய்வதற்கு இலக்கணமாகத் திகழ்ந்தவன் இலட்சுமணன். இராமனுக்கு ''ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை'' செய்தவன் அவன்.

தொண்டே செய்து வாழ்நாளைக் கழித்த இலட்சுமணன், பரதன், சத்ருக்னன் போல்வாரை, ஆழ்வார் ''சயமே அடிமைத் தலைநின்றார்'' என்றும் ''கோதில் அடியார்'' என்றும், ''நீக்கமில் அடியார்'' என்றும் சிறப்பாக அருளிச்செய்கிறார்.

தொண்டு என்பது பகவானுக்கோ, ஆச்சார்யனுக்கோ, பக்தியில் ஊறிய பாகவதர்களுக்கோ, யாருக்குச் செய்தாலும் எல்லாம் பகவானிடமே சென்று அடைகிறது.

''பிறர் நோவு கண்டால் 'ஐயோ' என்று அனுதாபப்பட்டு உதவுபவனே ஸ்ரீவைஷ்ணவன்'', நடத்தையினால், அனுட்டானத்தினால், செய்யும்



தொண்டினாலேயே ஒருவன் ஸ்ரீவைஷ்ணவனாகிறான் என்பது பெரியோரின் தீர்மானம்.

ஆகவே, பலனை எதிர்பாராத தொண்டின் மூலமாகவும் இறைவனைப் பற்ற முடியும். பாம்பின் நாக்கில் முள் தைத்து அது துடித்தபோது, அதனிடம் சென்று முள்ளை எடுத்து பாம்பைக் காத்தவர் கோவிந்தப் பெருமாள் என்கிற எம்பார்.

வாழை இலையை மரத்திலிருந்து பறிக்கும் போது அதில் சொரிந்த நீரைக் கண்டு கண்ணீர் சொரிந்த கூரத்தாழ்வானும் இங்கு வாழ்ந்திருக்கிறார்.

''நான்'', ''எனது'' என்ற அகங்கார மமகாரமற்ற ரிஷிகளும், முனிவர்களும், ஆழ்வார்களும், ஆவிக்கோர் பற்றுக் கொம்பாகிய இறைவனை, பக்தி ஒன்றாலேயே எளிதில் பற்றி உய்வடைந்தார்கள். ஆனால், சாமான்யர்களாகிய நாம், தன்னலமற்ற தொண்டின் மூலமே அவன் அன்பைப் பெற்று, நற்கதியடைய முடியும் என்பது திண்ணம்.








படம்: 1

அடிக் கோர்ப்பு விளக்கம்.

பலதரப்பட்ட மக்களும், ஏற்றத்தாழ்வுபாராது ஒருமித்து இறைவன் திருத்தேரை இழுப்பது, தமிழ் நாட்டின் ஒருமைப்பாட்டிற்கு ஓர் அடித்தளம். வனப்புள்ள பெரிய மரத்தினாலான தேர்கள் பல நூற்றாண்டுகளாகவே தமிழ் நாட்டின் கோவில்களிலெல்லாம் உள்ளன. தேர்களும், தேரோட்டமும் தமிழகத்தின் பாரம்பரியச் செயல்பாடாகும்.

தமிழகத்தின் தேர்களின் அடிப்பாகம் (தேரடி) நல்ல பிணைப்புகளுடன் உறுதியானதாகவும், நிலையானதாகவும், சுமார் 3 மீட்டரிலிருந்து 13 மீட்டர் வரை உயரமானதாகவும் செய்யப்படுகிறது. அதைச் சுற்றிலும் மிகுந்த வேலைப்பாடுகளுடன், கலையழகு பொதிய சிற்பங்கள் மரப்பலகைகளில் செதுக்கப் பெற்று, வரிசைவரிசையாக நாற்புறமும் கோர்த்து அழகின் மிளிர்ச்சி தரப்படுகிறது. மேலுள்ள நடுமேடையில் இறைவனின் உற்சவ சிலை வைக்கப்படும். தேரின் மேல் பகுதி விழாக்காலங்களில் பல குத்துமரங்கள் கொண்டும், நிறைய சட்டங்களாலும் கோர்க்கப்பெற்று அமைய, அதன் வெளிப்புறத்தில் வண்ணக் கோலத்துடன் கூடியதுணிகளால் மூடி அழகுபடுத்தப்படும்.

வடிவில் பெரிதாகத் தோன்றினாலும், பழுக்குறைந்தது நேர் வீதியில் இழுத்துச் சென்று அதே வீதியில் வந்தவழியே திரும்பச் சேர்த்து விடுகிறார்கள். தமிழகத் தேர்களனைத்தும், விழாக்கால ஓட்டத்தில் கோவிலைச் சுற்றி வலம் வந்து நான்கு மூலைகளில் செங்கோணமாகத் திரும்பிச் செலுத்தும் நிலையிலுள்ளது.

தமிழகத் தேர்களின் நிலையான அடிப்பாகம் 5 அல்லது 6 பெரிய மர உத்தரங்களில் தாங்குமாறு, நிறைய மரங்களைக் குறுக்கும், நெடுக்குமாய்ப் பிணைத்து, மிகவும் உறுதியாக, இறைதாங்கும் மேடைவரை அமைத்துச் செய்யப்படுகிறது. அவைகள் சுமார் 6 டன் நிறையிலிருந்து 180 டன் நிறை வரை அமைந்திருக்கிறது. அடி மர உத்தரங்களின் (Load Bearing Beams) அளவுகளும் அமைப்புகளும், தேரின் மொத்தப்பழுவின் ஆங்காங்குள்ள சரியான நிறைக்கூறுகளைத் தாங்குவதற்கு ஏற்ப மிகச்சரியாகவே அமைக்கப் பெற்றிருக்கிறது.

# திருத்தேரமைப்பிலும், தேரோட்டத்திலும்

தேரின் மொத்த பழுவும், அதனடி உத்தரங்களின் வழியே, அவைகளின் குறுக்கே அடியில் கோர்க்கப்பெற்ற அச்சுவிற்கும், அதன் இருமருங்கிலுமுள்ள சக்கரங்களின் வழியே தரையையும் அடைகிறது.

அச்சுகள் உத்திரங்களின் அடியில், அதற்கென்று அமைக்கப் பெற்ற கவட்டைகளுக்கிடையில் கோர்த்து குறுக்காகப் பொருத்தப்பெற்றிருக்கும். பக்கவாட்டில் நகராதிருக்க அச்சுகளில், சுவட்டைகளின் இடைவெளிக்கேற்ப காடிகளமைத்திருப்பார்கள். சுவட்டைகள் இரும்புப் பட்டைகளால் உறுதிப் பிணைப்பு தரப்பட்டிருக்கும்.

தேரின் மற்ற பாகங்களைப் போல் அதன் நிலையான அச்சுகளும் சக்கரங்களும் மரத்தாலேயே செய்யப்பட்டு வந்தன. இவைகளிரண்டும் ஒன்றுக்குள் ஒன்றாய் உராய்ந்தும், சுழன்றும் தேரை நடத்திச் செல்லும் பாகங்கள். அச்சுகள் தேய்ந்தும் முறிந்தும், சக்கரங்கள் சிதறிக்குறைந்தும் பழுதடைந்த விடுகிறது. ஆகவே மிகவும் உறுதிவாய்ந்த எளிதில் தேயாத வைரம் பாய்ந்த 'இலுப்பை மரங்களைத்' தேடி உபயோகித்தனர். பின்னர் அச்சுகளில் இரும்புப் பூணும், சக்கரக் குடங்களில் இரும்புக் குழாய்களும் பொருத்தி உபயோகித்தனர். மேலும் மர அச்சு உடைதலைத் தவிர்க்க, அவைகளினடியில் காடி அமைத்து பெரிய இரும்பில் திரட்டிய அச்சைப் பதித்து உபயோகித்தனர்.

**தேரின் அமைப்பில் ஓர் கூர்த்த மதியுடைய பொறியியல் செயல்பாடு:**

உறுதியான சாலைகள் அமைவுறாத அந்தக் காலத்தில் தேர்கள் மிகவும் அழுந்தி சக்கரங்கள் புதைந்து விடக்கூடாது. தேரின் மேல் அமர்த்தப்பட்ட இறைவன் அச்சு முறிவால், தேர் குடைசாய, கீழே விழுந்து விடுதல் ஆகாது. இவை இரண்டையும் தவிர்ப்பதற்கு தேர்களின் உட்புறத்தில் பல சக்கரங்களை அவைகளின் படர்ந்த அகலத்திற்கேற்ப அமைத்தனர். நான்கு வெளிச்சக்கரங்கள் மட்டுமே முழுப்பளுவையும் தாங்கின. மற்ற உட்சக்கரங்கள் மிதந்து வரும். இதற்காக வெளிப்புற அச்சுகள் உத்தரத்தில் படிந்திருக்கும் போது, உட்புற அச்சுகள் 5செ.மீ இடைவெளியுடன் இருக்குமாறு அமைக்கப் பெற்றிருக்கும். வெளிச்சக்கரங்கள் 5செ.மீ. வரை புதைந்து விட்டால் உள் சக்கரங்களின் அச்சு உத்தரத்துடன் மோதி தேரின் பளுவை ஏற்றுக் கொள்ளுகிறது, அதோடல்லாமல் பல சக்கரங்கள் தரையோடு அழுந்துவதால், தரையில் புதையும் ஆழம் மிகவும் மட்டுப்படுத்தப்படுகிறது. ஏதாவதொரு வெளி அச்சு முறிந்து விடும்போதும் இந்த ஏற்பாட்டினால் புவியீர்ப்பு அடுத்த உள் அச்சுக்குள்ளேயே அமைவதால் குடைசாய்ந்து வீழ்தலும் ஏற்படாது. தேர்களைப் படைத்துப் புகுத்திய அந்தக் காலத்தில் இதனை ஓர் சிறந்த பொறியியல் செயல்பாடாகக் கொள்ளலாம்.

சிவகாசி பத்ரகாளியம்மன்- மாரியம்மன் கோயில் தேரின் வெளிச் சக்கரங்கள்- அமைப்பின் கம்பீரத்திற்காக புதுப்பிக்கும் போது 45செ.மீ. வரை விட்டத்தை அதிகம் பண்ணிச் செய்யப்பட்டதால், உள் சக்கரங்களின் அச்சு, உத்திரத்தின் அடியில் 22.5 செ.மீ. இடைவெளியோடு அமைந்து விட்டது. அதுபோது (1975) ஒரு முறை அச்சுமுறிந்து குடைசாய நேர்ந்ததை நினைவுகொள்ளலாம். திருவாரூர் தியாகேசர் பழைய பெருந்தேரில் உட்புறம் 9 சக்கரங்கள் அமைக்கப் பெற்றிருந்தன. திருச்சிபெல் நிறுவனத்தின் மூலம் இரும்பில் அச்சுகளும், சக்கரங்களும் அமைத்தபோது, அவைகள் முறிந்து வீழ்ந்து பட வாய்ப்பில்லை என்பதால் உட்சக்கரங்கள் அனைத்தையும் களைந்து விட்டார்கள்.

மர அச்சுகளையும், சக்கரங்களையும், அப்போதைக்கப்போது இலுப்பைமரம் தேடி வாங்கிப் பழுது பார்க்க வேண்டி வந்ததாலும், ஒவ்வொரு தேரோட்டத்தின்போதும் இழுவைக்கு மிகுந்த மனித சக்தியைப் பெரும் பொருட் செலவில் சேகரிக்க வேண்டி வந்ததாலும் நிறையத் தேர்கள் ஓட்டம் காணாது நின்று போயின. பெல் நிறுவனம் 1969 - 70ல் திருவாரூர் தேர்களனைத்தையும் இரும்புச் சக்கரங்கள், அச்சுகள் பொருத்திக் கொடுத்த பின், மேற்குறித்த தொடர் செலவினங்கள் கோவில்களுக்குக் குறைந்தன. திருச்சி பெல் நிறுவனத்தில் இது போன்று அச்சு, சக்கரங்கள் நூறு தேர்களுக்கு மேலாகத் தொடர்ந்து ஓடும்வாறு புதுப்பித்து அளித்துள்ளார்கள்.




படம்: 2

# பொறியியல் நுணுக்கங்கள்


மா.கந்தசுவாமி
முதுநிலை மேலாளர் (ஓய்வு)
பாரத மிகுமின் தொழிலகம்
திருச்சி

தேர்களில் அச்சுகளும், சக்கரங்களும் நிலையானவை. திருப்பிச் செலுத்துமாறு செயல்முறை அதில் இல்லை. தேர் ஓர் வீதியின் முனையில் மறுவீதி திரும்புங்கால், சறுக்குக்கட்டைகள் உபயோகித்து (படம் 2) சிறுகச்சிறுகத் திருப்பி மிகுந்த சிரமத்துடன் செங்கோணத்திருப்பம் எய்துவார்கள். இதுபோது சறுக்குக்கட்டைகள் மிகவும் சேதமடைகிறது. சமீபத்தில் வெட்டப்பட்ட பச்சைப் புளிய மரத்திலிருந்து சருக்குக்கட்டைகள் பெரும்பணச் செலவில் செய்யப்படுகின்றன. சுற்றுக்சூழ்நிலை பாதிக்காதவாறு, நிறைய மரங்கள் வளர்க்க குரலெழுப்பும் இந்நாளில் இந்த மரத்தின் உபயோகம் பெரிதும் குறைக்கப்பட வேண்டியது மிகவும் அவசியம்.





படம். 3.

தட்டையான அடிப்பட்டை. குழாய்க் குழைவுடன்.

முதலில் இரும்புச் சக்கரங்கள் தட்டையான அடிப்பட்டையை உடையனவாக இருந்தது. அதன் இரு ஓரங்களிலும் உள்ள சிறிய குழைவு, சறுக்கு கட்டைகளைக் கொடுத்து திருப்புங்கால் சறுக்குவதைக்காட்டிலும் உடைந்து சேதமாவதே அதிகமாக இருந்தது. 1988-ல் பெல் நிறுவனத்தில் இதில் புதிய வடிவமைப்பு மாற்றம் புகுத்தப்பட்டது. இதன் படி பற்றவைப்பில்லா உருக்குக்குழாயை அதன் ஆரத்தினளவு பெரிய குழைவு கிடைக்குமாறு சக்கர அடிப்பட்டையின் ஓரங்களில் வளைத்துப் பொறுத்தப்பட்டது. புதிய சக்கரங்களுக்கெல்லாம் இம்மாற்றத்தோடு செய்வதாலும், துவக்கத்தில் செய்த சக்கரங்களையும் இம்மாற்றங்களுக்கு உட்படுத்தியும், இந்தப் பெரிய மரங்களுக்கான செலவினத்தைக் குறைப்பதிலும், மரங்கள் அதிகமாக வெட்டப் படுவதைக் குறைக்கவும் வழிகோலப்பட்டது. பெல் நிறுவனமும் இதை நல்ல ஒரு தொண்டாகவே தொடர்ந்து செய்து வருகிறது.

**வீதித்திருப்பத்தில் புதுமையான வீச்சுத் திருப்பம்:**

திருவாரூர் தியோகேசருடைய திருக்தேர்தான் தமிழகத்தில் மிகப்பெரியது, வனப்பு மிகுந்தது. இத்தேரின் அடிப்பாகம் 180டன் எடையுள்ளதாகும். பனங்குத்துமரங்களாலும், மூங்கிலாலும் மேற்பகுதி வேய்ந்து 28 மீட்டர் (92 அடி) உயரத்தில் கலசமிருக்கும். முழுமையாக அதன் எடை 300டன்வரை ஆகும்.

இத்தேருக்கு பெல் நிறுவனத்தில் அச்சு சக்கரங்கள் இரும்பினாலமைத்த தோடல்லாமல் ஹைட்ரோ - மெக்கனிக்கல் பிரேக் பொருத்திக் கொடுக்கப் பெற்றது. முன் இரு சக்கரங்களுக்கும் பிரேக் தனித்தனியே இயங்குவதால் பாதையை வலமும் இடமும் சரி செய்து கொண்டே செல்லஉதவுகிறது. அவசர வேளைகளில் பிரேக் உதவியால் தேரினை உடன்நிறுத்தலாம்.

இத்தேரினை வீதித்திருப்பத்தில் ஒரே வீச்சில் திருப்ப ஓர் புதுமையான முறையைக் கையாளுவார்கள்.




சாரடிப் பலகை.

படம்: ④

**பழமையான முறை:**

''சாரடிக்கட்டைகளை'' வீதியில் பரப்பி அடுக்கி, அதனில் தேரை ஏற்றி, திரும்ப வேண்டிய வீதியின் மையம் வரை முன் சக்கரங்கள் வருமாறு நிறுத்தப்படும். திரும்ப வேண்டிய சாலைக்கு இழுவை வடங்கள் அனைத்தும் எடுத்துச் செல்லப்படும். பின்புற வலது சக்கரத்தை மையமாகக் கொண்டு அத்தனை இழுவை சக்தியையும் முன் அச்சுவின் மையத்தில் ஒருமித்து இழுக்கும்போது முன் இரு சக்கரங்களும் பக்கவாட்டில் சறுக்கி, ஒரே வீச்சில் செங்கோணம் திரும்பிவிடும். ''சாரடிக்கட்டைகள்'' என்பது படம் - 4 பதப்படுத்திய சுமார் 2 1/2 மீட்டர் முதல் 4 மீட்டர்வரை நீளமான, நீளவாக்கில் மேல் புறம் குழைவுபடுத்தப்பட்ட தேக்குக் கட்டைகள். குழைவான பக்கத்தின் குறுக்கே சக்கரங்கள் அமர்வதால் சக்கரங்கள் உராய்ந்து சறுக்கும் பரப்பளவு மிகவும் குறைகிறது. மேலும் அவைகளில் விளக்கெண்ணை போன்றவை தடவப்படுவதால் மேலும் சறுக்குவது எளிதாகிறது.

90° திருப்பம் கணநேரத்தில் திரும்பும்போது தியாகேசர் தேரில் தொங்கும்

3.5 மீ. தொம்பையும், மற்ற தோரணங்களும் நன்கு சுழன்று திரும்பும். அந்தச்சூழல் திருப்பம் ஓர் கண் கொள்ளாக் காட்சி திருவாரூர் தேரழகு என்பதன் கருவானது இச் செயல்பாடே. தேர்களின் சக்கரங்களுக்கும், வீதியின் தரைக்கும் இடையில் உராயும் இருக்கத்தை என்ன அருமையான முறையில் குறைத்து, முழு இழுவை சக்தியையும் ஒருமுகப்படுத்தி இவ்வாறு திருப்புவது என்பது ஓர் மகத்தான பொறியியல் சாதனையாகும். இம்முறை காலங்காலமாய் இருந்திருக்கிறது. என்னே **அப்பழைமை வித்தகர்களின் பொறியியல் ஞானம்.**

மற்ற தேர்களிலெல்லாம் சறுக்குக்கட்டைகள் படம் - 2 உபயோகித்து சிறுகச்சிறுகத்தான் திருப்புகிறார்கள். இழுவை வடம், நேரே வடம்போக்கித் தெருவிலிருந்து இழுக்கப்பட சறுக்குக் கட்டையை சக்கர உள்விழும்பு ஏறிச் சறுக்கி திசைமாறப் பண்ணுவார்கள். ஒரு பகுதி இழுவை சக்தியே (A Component of the total pulling Force) பயன்பட, மிகுதி சக்தி விரையமாக்கப்படுகிறது. வீச்சுத் திருப்பம் சிறப்பானது என்றாலும், நிறைய நன்மரங்கள் சேதமாகின்றன. மிகுந்த பாதுகாப்புக்கவனம் தேவை. இந்த ஏற்பாடுகளைச் செய்ய நிறைய நேரம் தேவைப்படுகிறது. இம்முறைப் பாட்டினைச் சற்று சீர்படுத்தும் வகையில் காலம், பணம் செலவினைக்குறைக்க வழி வகுக்கும் - தேரினை எஃகுத் தகடுகளில் நிறுத்தி கிரீஸ்/ எண்ணை தடவி எளிதில் திருப்பும் முறையினை 1990-ல் புகுத்தப்பட்டது. அதை விரிவுபட பட விளக்கத்துடன் கீழே தரப்படுகிறது.

வீச்சுத்திருப்பம் - புதியமுறை:

தேர் திரும்ப வேண்டிய வீதியை நெருங்குங்கால், திரும்பும் வீதியின் மையத்திலிருந்து, சக்கரமையதூரத்தையும் விட சுமார் 70 மீட்டர் வரும் போதே தேரை நிறுத்திக் கொள்ள வேண்டும். (படம் 5 முதல் காட்சி) மேலும் நேராக திரும்பும் வீதி மத்தி எட்டும் வரை இழுத்தால், சக்கரம் எங்கு நிலை கொள்ளுமோ அப்புள்ளியை வீதியில் வருகிக்கொண்டு பின்புற சக்கரங்களின் வலது சக்கரம் வந்து நிலைகொள்ளும் இடத்தை மையமாகக் கொண்டு இரண்டு வளைகோடுகள் படத்தில் காட்டியவாறு வருகிக்கொள்ள வேண்டும். வலது சக்கரத்துக்கு, சக்கர மையங்களின் இடைவெளி அளவை ஆரமாகக்கொண்டும் இடது சக்கரத்துக்கு எதிர் முனை சக்கரங்களுக்கு இடைப்பட்ட அளவை ஆரமாகக்கொண்டும் வளைகோடு குறிப்பாகப் போட்டுக் கொள்ள வேண்டும். ஒரு நூற்கயிற்றில் இந்த இரு அளவுகளையும் அளந்து முடிபோட்டுக் கொண்டு இருவர் சேர்ந்து செய்யலாம். பின்னர் 10 மி.மீ. இரும்புத் தகடுகளை (1.25 ★2.5 மீ) ஒன்றன் கீழ் ஒன்றாய் செருகி குறிப்பிட்ட ஆரஅளவு வளைகோடு மேவியது பார்த்துச் சரி செய்து கொள்ளவேண்டும். முன்



படம்: 5/1



படம்: 5/2

சக்கரங்களுக்கு வீச்சுப்பாதை தயாராகிவிட்டது. (படம் 5 இரண்டாம் காட்சி) நிறுத்தியுள்ள தேரை நிதானமாக நேரே இழுத்து வீச்சுப்பாதைத் தகடுகள் துவக்கத்தில் சக்கரம் வந்து நிற்குமாறு சருக்குக் கட்டையை அணைக்கட்டையாக உபயோகித்து நிலைப்படுத்த வேண்டும். தகடுகளின்மேல் கிரீஸ், எண்ணை போன்றவைகளைத் தடவி வீச்சு எளிதாக நடக்க ஏதுவாக்க வேண்டும்.

வடம்போக்கித் தெருவிலிருக்கும் இழுவை வடங்களனைத்தையும் ஒவ்வொன்றாகத் திரும்பும் வீதிக்குக் கொண்டு வரல் வேண்டும். முன் அச்சுவின் மையக்கோட்டின் வழியே அத்தனை இழுவை சக்தியையும் ஒருமுகமாய் இனி உபயோகிக்கலாம். அத்தனை மனித சக்தியும் திருப்புவதற்கே பயன்படுகிறது. மேலும் சக்கரங்கள் இரும்பினாலானதாலும், பக்கவாட்டில் சறுக்கி இழுக்கப்படப் போவதாலும், இடது சக்கரத்தில் அதே இழுவை மையக் கோட்டிற்கு நேராக ஓர் அழுந்தித் தவழும் கனரக வண்டி கொண்டு தள்ளி விடவும் செய்யலாம்.

ஒரே நேரத்தில் இழுவையும், தள்ளுதலும் நிகழ்வதால் தேரும் படத்தில் காட்டியவாறு சுழன்று செங்கோணம் கணப்பொழுதில் திரும்பிவிடுகிறது. இந்தப்புதுமுறையில் ஆண்டுதோறும் ஆகும் மரச்செலவு முழுமையாகத் தவிர்க்கப் படுகிறது. மிகக்குறைந்த நேரத்தில் தேர்திரும்பிவிடுகிறது.

இந்த முறைப்படி திருவாரூர் தேர் மட்டுமல்லாது, மற்ற 80 டன்னுக்கும் மேற்பட்ட தேரடியை உடைய தேர்களையும் செலுத்த முயற்சிக்கலாம். திருவாரூரில் அங்கு இயங்கும் மக்கள் சக்தியை நல்ல கட்டுப்பாட்டில் இயக்குவதால் புதுமைச் செயல்பாடுகளை எளிதில் பழக்கப்படுத்தி விட்டார்கள். இம்முறையை ஸ்ரீவில்லிப்புத்தூர் நான்காவது தேர்த்திருப்பத்தில் 1991-ல் வேளாண்துறைப் பொறியாளர்கள் உதவியோடு செய்து காட்டி அப்பகுதி மக்களும் அறிய செய்யப்பட்டுள்ளது. அவ்விதப் பெரிய தேர்கள் ஸ்ரீவில்லிப்புத்தூர் (ஆண்டாள்), திருநெல்வேலி (நெல்லையப்பர்) அவினாசி (அவினாசிலிங்கேசுவரர்), கும்பகோணம் (சாரங்கபாணி) போன்ற இடங்களில் உள்ளன.

இது போன்று நமது நாட்டின் பாரம்பர்யச் செயல்பாடுகளில் பொதிந்துள்ள பொறியியல் நுண்செயல்களையெல்லாம் முயன்று வெளிக்கொணருவோமாக.



## மன அமைதி பெற வழிகள் நிறைய

வாழ்க்கையில் மன அமைதியை விரும்பும் ஒருவன் ஒவ்வொரு நிலையிலும், நிகழ்விலும் விவேகத்துடன் செயல்பட வேண்டும். எது சரி, எது தவறு, எது முடியும், எது முடியாது என்பதைப் பற்றி நமக்குத் தெளிவாக நம் முன்னோர்கள் நிறைய நூல்களில் சொல்லிவிட்டு போயிருக்கிறார்கள். அவை கல்ப காலத்திற்கும் பொருந்துபவை. ஒரு குறிப்பிட்ட நிலைமையில் சான்றோர்கள் சொன்ன நெறிமுறை எது? மறை நூல்கள் கூறுவது என்ன? உங்கள் மனசாட்சி கூறுவது என்ன? இந்த மாதிரி தருணங்களில் மகாத்மாக்கள் எப்படி நடந்து கொண்டிருக்கிறார்கள். இப்படி ஒவ்வொரு நிலையிலும் நமது பார்வையை தெளிவுபடுத்திக் கொள்ளலாம். சரியான பாதையைக் கண்டுபிடிக்க ஆத்ம சோதனை செய்வது மிக எளிது! மனம் போன போக்கெல்லாம் போய் புலன்கள் மற்றும் உணர்ச்சிகளின் வழியில் இயந்திரமயமாக செல்வது மிக எளிது! மனம் போன போக்கெல்லாம் போய் புலன்கள் மற்றும் உணர்ச்சிகளின் வழியில் இயந்திரமயமாக செல்வது என்பது மாயை விரித்த வலையில் நேராகச் சென்று விழுவதேயாகும்.

- ஸ்வாமி சிவானந்தா

# பதில்



நம் நாட்டில் லிங்கப் பிரதிஷ்டையில் எத்தனை வகைகள் உள்ளன? அவை அப்பெயர் பெறக் காரணமென்ன?

நம் நாட்டில் சுயம்பு, கணலிங்கம், தைவிகம், ஆர்ஷம், மானுடம், பாணலிங்கம் எனப் பலவகை லிங்கங்கள் பிரதிஷ்டிக்கப்பட்டுள்ளன.

தானே தோன்றிய லிங்கங்களுக்குச் ''சுயம்பு லிங்கம்'' என்பது பெயர். தேவர்களாலும் தேவகணங்களாலும் பிரதிஷ்டிக்கப்பட்ட லிங்கங்களுக்கு ''தைவிகம்'' என்பது பெயர். இதையே ''கணலிங்கம்'' என்றும் வழங்குவர்.

ரிஷிகளால் பிரதிஷ்டை செய்யப்பட்ட லிங்கங்கள் ''ஆர்ஷலிங்கம்'' எனப்படும்.

மக்கள் விரும்பிப் பிரதிஷ்டை செய்த லிங்கங்களுக்கு ''மானுடம்'' (மானுடப் பிரதிஷ்டை) என்பது பெயராகும். அந்தந்தக் கோவில் தல வரலாறு மூலம் இதை உணர முடியும்.

மேலும் இராட்சசர்களால் பிரதிஷ்டை செய்யப்பட்ட லிங்கங்களுக்கு ''ராட்சசம்'' என்பது பெயராகும்.

''பாணலிங்கம்'' என்பது தனிச்சிறப்பு வாய்ந்ததாகும். இது ''சதா சிவஸ்வரூபம்'' என்று ஆகமங்கள் கூறுகின்றன. இதைப் பூஜை செய்ய பிரதிஷ்டைக் கிரியைகள் வேண்டாம். எப்போதும் இறைவன் பாணலிங்கத்தில் ப்ரயட்சமாக விளங்குவார். இது தண்ணீரில் (நர்மதை நதியில்) தோன்றுவதாகும். பாணாசுரனால் பூசிக்கப்பட்டதுமாகும்.

''பாணம்'' என்றால் தண்ணீரைக் குறிக்கும். எனவே, தண்ணீரில் தோன்றியது என்ற பொருளில் ''பாணலிங்கம்'' என்று வழங்கப்படுகிறது. இதை ஒருவர் தினமும் பூசித்து வந்தால் அவர் போக மோட்சங்களை நிச்சயமாக அடைவார்.

''பாணம்'' என்பதற்குச் சதாசிவர், தண்ணீர், பாணாசுரன் பூஜித்த லிங்கம் ஆகிய பொருள்களும் உண்டு.

''பத்து'' என்பது யாது? திருவாய்மொழியின் பத்துக்களில் முறையே விளக்கப்படும் பொருள்கள் என்னென்ன?

நூறு பாடல்கள் கொண்ட பகுதியைப் பத்து என்று கூறுவது சமய மரபு. அம்முறையில் திருவாய்மொழி ஆயிரம் பாடல்களும் பத்துகளாக அமைந்துள்ளன. அப்பத்துப் பகுதிகளிலும் பின்வரும் பத்துப் பொருள் நம்மாழ்வார் என்னும் சடகோபரால் விளக்கப் பெற்றிருக்கின்றன.

1. பரத்துவம் - எல்லாப் பொருள்களுக்கும் மேலானவனாதல்.
2. காரணத்துவம் - எல்லாப் பொருள்கட்கும் காரணனாதல்.
3. வியாபகத்துவம் - எல்லாப் பொருள்களி னுள்ளும் பரந்து தானாதல்
4. நியத்திருத்துவம் - எல்லாப் பொருள்களையும் நியமிக்கின்றவனாதல்.
5. காருணிகத்துவம்- பேரருளாளனாதல்.
6. சரண்யத்துவம் - எல்லாப் பொருள்களுக்கும் புகலிடம் ஆதல்.
7. சக்தத்துவம் - அளவில்லா ஆற்றலை உடையவனாதல்.
8. சத்தியகாமத்துவம் - அளவிலா ஆற்றலால் ஆக்கப் பெறும் நித்திய சூரிகள், மற்றும் பரிசனங்கள் முதலியன உடையவனாதல்.
9. ஆபத்சகத்துவம் - உயிர்களுக்கு நேரும் ஆபத்துகளிலே துணைவனாதல்.
10. ஆர்த்தி ஹரத்துவம் - அடியவர்களுக்குப் பிறவித் துன்பத்தின் பவனாதல்.

திக்பாலகர்கள் என்பவர் யாவர்? அவர்களின் பெயர்கள், திசைகள், ஆயுதங்கள், சக்திகள் ஆகியனவற்றைக் கூறுக?

எட்டுத் திசைக்கு எட்டு பாலகர்கள் (காப்பாளர்) உள்ளனர். அவர்கட்குத் திக் பாலகர்கள் என்பது பெயர்.

| | பெயர் | திசை | வாஹனம் | ஆயுதம் | மனைவி | பட்டினம் |
|---|---|---|---|---|---|---|
| 1. | இந்திரன் | கிழக்கு | வெள்ளையானை | வஜ்ரம் | சசிதேவி | அமராவதி |
| 2. | அக்னி | தென்கிழக்கு | ஆடு | சக்திவேல் | ஸ்வாஹாதேவி | தேஜோவதி |
| 3. | எமன் | தெற்கு | எருமை | தடி (தண்டம்) | ஸ்வர்காதேவி | சம்யமநீ |
| 4. | நீருருதி | தென்மேற்கு | ப்ரேதம் (உடல்) | கத்தி | வர்காதேவி | கிருஷ்ணவதி |
| 5. | வருணன் | மேற்கு | முதலை | பாசம் (கயிறு) | காளகண்டீ தேவி | சரஸ்வதிபுரம் |
| 6. | வாயு | வடமேற்கு | மான் | கொடி | நிர்மணிதேவி | கந்தர்வத்திரிபுரி |
| 7. | குபேரன் | வடக்கு | மனிதன் | தடி (கதை) | நாரிணீதேவி | அளகாபுரி |
| 8. | ஈசானன் | வடகிழக்கு | வ்ருஷபம் | சூலம் | சுசிகேதினி | யசோவதிபுரம் |

# பகைவனுக்கும் அருளிய நன்நெஞ்சர்

கே.பாலசுந்தரி.எம்.ஏ.,

பகை!

இந்த இரண்டெழுத்துச் சொல்லால் அழிந்த நாடுகள் எத்தனை? முறிந்த உறவுகள் எத்தனை? சிதைந்த குடும்பங்கள் எத்தனை? எத்தனை? பகைமை தொடர்கதையாவதின் விளைவே இது. இந்தத் தொடர்கதை தொடராதிருக்க என்ன வழி இப்பகை உணர்வை வேரோடு மாய்க்க மாற்று வழி என்ன. அன்புதான் மாற்று வழி. மாற்றம் ஏற்படுத்தும் வழி.

''பகையாளி குடியை உறவாடிக்கெடு'' என்பது பழமொழி. அதாவது பகைவனிடம் நட்பு கொண்டது போல நடித்து அவன் குடியைக் கெடுக்க வேண்டும் என்று பொருள் கூறுகின்றனர். அப்படி உறவாடிக் கெடுத்த நம் குடியை வெறொருவர் உறவாடிக் கெடுக்கமாட்டாரா? வல்லவனுக்கு வல்லவன் வையகத்தில் உண்டு, என்பதும் பழமொழி தானே? நாம் செய்யும் காரியம் காரணமாக மாறி நம்மைக் கெடுக்கும் என்பதே உண்மை. இதனையே (cause and effect) என்று உளவியல் வல்லுனர்கள்கூறுகின்றனர்.

பகையாளி குடியுடன் உறவாடிப் பகையைக் கெடு என்பதே உண்மையான பழமொழி. அதன் அர்த்தம் மாறி அனர்த்தமாகக் கூறப்பட்டு வருகிறது. எனவே பகை தொடர்கதையாகிறது. இந்தத் தொடர்கதைக்கு முடிவுரைதான் என்ன? முடிவுரை மட்டுமல்ல- முகவுரையும் தருகிறான் அந்த முண்டாசுக்கவிஞன்.

''பகைவனுக்கு அருள்வாய் நன்நெஞ்சே
பகைவனுக்கு அருள்வாய்
பகை நடுவினில் அன்புருவான நம்
பரமன் வாழ்கிறான்
- பாரதி''

பகையை வெல்லும் வெற்றி அன்று மட்டும் அவனுக்கு மட்டும் இன்பம் பயப்பது. பகைவனுக்கு அருளுவதால் ஏற்படும் வெற்றி அவனை தெய்வ நிலைக்கு உயர்த்துகிறது. ஆம்! மனிதனும் தெய்வமாகலாம்!! பகைவனுக்கு அருளும் போது!!! அப்படிப் பகைவனையும் பரமசிவன் வடிவாகவே கண்டவர்ஒருவர்.

சேது நாட்டின் தலைநகர் திருக்கோவிலூர். அங்கு மலாடர் மரபில் வந்த மன்னன் ஒருவன் வாழ்ந்து நன்னெறியுடன் ஆண்டு வந்தான். மிகச் சிறந்தவீரன். வெற்றிகள் பல கண்டவன். சிவநேசச்செல்வன். சிவனடியார்களின் திருவுருவே மெய்ப்பொருள் என்று நம்பியவன் சிவனடியார்களுக்குப் பண் செய்து மகிழ்ந்தவன் அவர்களின் திருவுருவே மெய்ப்பொருள் என்று கருதியதால் மெய்ப்பொருள் நாயனார் என்றே அழைக்கப்பட்டார்.

இதனிடையே முத்தநாதன் என்ற பகை மன்னன் சேது நாட்டை வெற்றி கொள்ள விரும்பினான். பலமுறை போரிட்டும் - பலனில்லை . தொடர்ந்து தோல்வியே கண்டான். சேது நாட்டின் வளம் அவனைப் பொறாமை கொள்ளச் செய்தது. நேர் வழியில் கிடைக்காத வெற்றியை குறுக்கு வழியில் அடைய முடிவு செய்தான். என்ன செய்வது? குறுகியபுத்தி உள்ளவன் தேர்வு செய்வது குறுக்கு வழியைத்தானே?

குறுக்கு வழியில் வாழ்வு தேடிட கொள்ளையடிப்பதில் வல்லமை காட்டும் திருட்டு மனிதன் ஆனான் முத்தநாதன். குணத்திற்கு ஏற்ப திருட்டுத்தனமாய் ஒரு திட்டம் தீட்டுகிறான். அதன்படி சிவனடியார் வேடம் பூண்டு திருக்கோவிலூர் அடைகிறான். வேடம் தந்த துணிவில் அந்தப்புர வாசல் வரை வருகிறான். காவல் காக்கும் தத்தன் தடுக்கிறான். உறங்கும் வேளை என உரைக்கிறான். மன்னருக்கு வீடுபேறு அளிக்கவல்ல மந்திரம் உபதேசிக்க வந்துள்ளேன் தடுக்காதே எனக் கூறி உள்ளே நுழைகிறான். அரசி எழுப்ப மன்னன் துடித்து எழுகிறான். தலை வணங்கி வரவேற்கிறான். தங்கள் வருகையின் நோக்கம் என்ன என்று வாஞ்சையுடன் கேட்கிறான்.

இறைவனே இயற்றிய ஆகமநூல் என்னிடம் உள்ளது, வேறு எங்கும் இல்லாத நூல், அதனை உனக்குப் போதிக்கவே வந்தேன். அதைத் தனிமையில் உபதேசிக்க வேண்டும் என்கிறான். குறிப்பறிந்து அரசி அகலுகிறாள்.

தான் பணிந்து வணங்கிக் கண்மூடி அமர்ந்து பாடம் கேட்க ஆயத்தமாகிறார் மெய்ப்பொருளார். ஓலைச் சுவடியில் மறைத்து வைத்திருந்த வாளால் ஓங்கி வெட்டுகிறான் முத்தநாதன். அப்போதும் அவனது தவ வேடமே மெய்ப்பொருள் என வணங்கித்தானே வென்றவர் ஆகிறார் மெய்ப்பொருளார்.

தத்தன் சந்தேகத்தோடு உள்ளே நோக்க நடந்த விபரீதம் புரிகிறது. முத்தநாதனை

வெட்டப் பாய்கிறான். தடுக்கிறார் மெய்ப்பொருளார். இவரை யாதொரு இடையூறும் இன்றி அனுப்பி வைப்பாய் எனக் கூறுகிறார். செய்தி அறிந்து ஓடி வந்த வீரர்களை தடுக்கிறான் தத்தன். மன்னன் ஆணைப்படி இவரை பாதுகாப்பாக நகர் எல்லையில் கொண்டு விட வேண்டும் என்று கூறி அதன்படியே செய்கிறான். அனுப்பித்த செய்தி கூறுகிறான் மன்னனிடம். செய்தி கேட்டு சிந்தை குளிர்கிறார் மெய்ப்பொருளார். தத்தனை வாழ்த்துகிறார்.

அழுது அரற்றும் அனைவரையும் ஆற்றுப்படுத்துகிறார். திருநீற்றுச் செல்வர்களைப் பேணிப் பாதுகாக்கப் பணிக்கிறார். தன் மன அரங்கில் நடமிடும் தில்லைக் கூந்தனைத் தியானிக்கிறார். தில்லைக் கூத்தன் தரிசனம் தந்து தனது திருவடி நிழலும் தருகிறான்.

**''கறுத்து இன்னா செய்தவக் கண்ணும்**
**மறுத்து இன்னா**
**செய்யாமை மாசற்றார்கோள்''**



மெய்ப்பொருளார்

# இடர் களைவாய் இறைவா

சிவ. அம்பலவாணன்

வினையின் பயனாய் ஆன்மாக்களுக்கு ஏற்படும் அல்லல்களை களைவது இறைவன் அருள். அவன் அருளின்றி இடர்கள் அகலா. அருள் கிட்டின் பகலவன் கண்ட பனி போல் விலகும் என்பது நிச்சயம்.

அடியார்களுக்கு ஏற்படும் இடர்களைக் களையும் இறைவனைப் போற்றித் துதிக்க திருமுறைகளில் மூவர் தேவாரங்களில் நான்கு இடர்களையும் பதிகங்கள் உள்ளன. அத்தகைய பதிகங்கள் திருமறைக்காட்டிலிருந்து மதுரைக்கு மங்கையர்க்கரசியின் வேண்டுதல்படி சைவம் தழைத்தோங்கவும், சமணம் விலகவும் புறப்பட்ட திருஞானசம்பந்தரின் பயணத்தின் முன்பு ''நாளும், கோளும்'' சரியில்லையென்று கூறிய அப்பர் பெருமானுக்கு பதிலுரையாக வெளியிட்ட பதிகம் சம்பந்தரின் ''கோளறு பதிகமாகும்''

திருநெடுங்களத்தில் அருளிய ''மறையுடையாய் தோலுடையாய்'' என்ற பதிகமும், ஆவடுதுறையில் அருளிய ''இடரினும் தளரினும்'' எனும் பதிகமும், வடதிருமுல்லைவாயிலில் சுந்தரரின் திருப்பாட்டாக வெளியிடப்பட்ட ''திருவும்'' என்ற பதிகமும் என்பர் சைவ நல்லுலகத்தினர். திருநெடுங்களத்தில் அருளிச் செய்த முதலாம் திருமுறையில் ''மறையுடையாய்'' எனத் தொடங்கும் பதிகத்தினைத் தொடர்ந்து இவ்விதழில் ''மலைபுரிந்த'' எனத் தொடங்கும் பதிகத்தினைக் காண்போம்.

**''மலைபுரிந்த மன்னவன்றன்**
**மகளையோர்பால் மகிழ்ந்தாய்**
**அலைபுரிந்த கங்கைதங்கு**
**மளிர்சடையா ரூரா**
**தலைபுரிந்த பலிமகிழ்வாய்**
**தலைவநின்றாள் நிழற்கீழ்**
**நிலைபுரிந்தா ரிடர்களையாய்**
**நெடுங்களமே யவனே.'' 4.**

திருநெடுங்களத்தை விரும்பிக் கோயில் கொண்டுள்ளவனே! மலையரசனின் மகளாகிய பார்வதி தேவியை ஒரு பாகத்தில் கொண்டு மகிழ்ந்தவனே! அலைகள் வீசும் கங்கை நதியானது தங்குகின்ற சடையையுடைய திருவாரூர்ப் பெருமானே! பிரமகபாலத்தில் பிச்சையேற்று மகிழ்பவனே! எல்லோருக்கும் தலைவனே! நின்னுடைய திருவடி நிழற்கீழ் உறுதியுடன் நிற்பாரது இடர்களைக்களைந்து அருள்புரிவாயாக.

நம் இடர்கள் களைய ஞானசம்பந்தர் அருளிச் செய்துள்ள முதலாம் திருமுறையில் வரும் இப்பாடலை இம்மாத பாராயணப் பகுதியாகக் கொண்டு பாராயணம் செய்து பலன் பெறுவோமாக.



# கயிலாயம் - ஓர் ஆன்மீகக் குறியீடு

தமிழாகரர் தெ.முருகசாமி
புதுச்சேரி - 9




மன்னும் இமயமலை எங்கள் மலையே என நம் பாரத நாட்டின் எல்லையை வரையறுத்தார் மகாகவி. இவ்வரையறையான கருத்து அரசியல்வகையிலும் அண்டை நாட்டு எல்லைப்புறக் கோட்பாட்டு வகையிலும் முக்கியத்துவம் வாய்ந்த ஒன்று. இமயம் எங்களுக்கே சொந்தம் இதில் யாரும் உரிமை கொண்டாட முடியாது எனச் சொல்லாமல் சொல்லுவது போல் உள்ள ஒரு கவிஞனின் குரல்தான் அது. அரசியல் வகையாக (ரீதியாக) அம்பலப்படுத்தப்பட்ட இந்த இமயமலை பற்றிய நினைப்பு இந்தியர்க்கு வழிவழியாக வந்த ஒன்று. அந்தவழிதான் ஆன்மீகவழி. அந்தவழித்தடத்தில் தட்டுப்பட்ட நம்பிக்கைதான் ஆண்டவன் இமயத்தில் தங்கியிருக்கின்றான் என்ற கருத்து. இந்த அடித்தளத்தில்தான் சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்குச் சிலையெடுக்க இமயத்திற்குச் சென்றதாக இளங்கோவடிகள் கூறினார். இக்கருத்துக்கு வலிமை சேர்க்கவே காரைக்காலம்மையாரும், அப்பரடிகளும் வடக்கே செல்லும் ஆன்மீகப்பயணத்தைத் தொடங்கி வைத்தவர்கள் எனலாம். எனவே, ஒட்டுமொத்த இந்திய ஆன்மீக நிலைப்பாட்டின் தொடக்கமும் முடிவும் கங்கை, காவிரி என்ற அடிப்படையில் ஆன்மீகவாசமாகப் பதப்படுத்தப்பட்ட சொல்தான் இமயமலை.

உலகில் உள்ள மலைகளுக்கெல்லாம் மிக உயர்ந்தது இமயமலை. செங்குத்தான கெம்பீரத் தோற்றம் உடையது. கடல்மட்டத்திற்குப் பல்லாயிரக்கணக்கான அடி உயரமுடையது. இது ஒரே அளவானதாக இல்லாமல் பக்க மலைகள் பலவற்றைக் கொண்ட அடுக்கடுக்கானது. தெய்வீகம் குவிந்த அம்மலைத்தொடர் அடுக்கில் ஒன்றுதான் கயிலாயமலை. இமயமலையின் தெய்வீகத்திற்குக் கயிலாயமே ஆன்மீகக் களஞ்சியம்.

ஓரிடத்தின் மின் உற்பத்தி எல்லா இடங்களுக்கும் பரவலாக்கப்படுவது போலக் கயிலாயத்தின் தெய்வீகந்தான் இமயமலை முழுவதும் ஒளிபெறக் காரணமானது என்பதே ஆன்மீக உலகின் கணிப்பு. இதை உறுதிப்படுத்தும் விதமாகவே புராணங்களின் தொடக்கம் கயிலாயமாக அமைந்தது. தெற்கே தோன்றிய திருத்தொண்டர் புராணமும் கயிலாயத்தில் தோன்றிக் கயிலாயத்தில் முடிவதாகவே அமைந்துள்ளது. பொதுவாக எந்தப் புராணமானாலும் அதன் தொடக்கம் கயிலாயமாக உள்ளதை நுட்பமாக

உணரவேண்டியுள்ளது.

சூதமுனிவர், சம்புபத்தர் போன்ற முனிவர்களுக்குச் சிவ பெருமானின் திருவிளையாடல்களைக் கயிலாயத்திலிருந்து கூறுவதாகத் திருவிளையாடல் புராணம் தொடங்குகிறது. சிறப்பாகப் புராணங்களின் முடிபு எப்படியாயினும் அவற்றின் தொடக்கம் கயிலாயமாகவே உள்ளதற்குத் தக்க காரணம் உண்டு. அதுதான் ஆன்மீகத் தேடலுக்கான ஓர் இடம் கைலாயம் என்பதாகும். முனிவர்கள் பலர் கூடி அறிவுப் பரிமாற்றமாகப் புராணத்தைக் கொண்டுள்ளனர். முனிவர்களைப் போலவே அங்குள்ள இறைவன் உபதேசம் செய்வதாகவும் புராணங்கள் கூறுவதால் அறிவுத் தேடுலுக்கான சரியான இடமாகக் கயிலாயம் இருந்ததாகத் தெரிகிறது.

உமாதேவியின் ஐயத்தைப் போக்குவதாகப் பிரபுலிங்கலீலை என்ற நூலைச் சிவப்பிரகாசர் படைக்கிறார். இதுபோலவே அறுபத்துநான்கு திருவிளையாடல்களில் ஒன்றான வலைவீசின திருவிளையாடலில் சிவபெருமான் கயிலாயத்தில் உமாதேவிக்கு வேதரகசியங்களைக் கூறுவதாக அமைந்துள்ளது. இறைவனும் தட்சணா மூர்த்தியாகி சனகாதி முனிவர் நால்வர்க்கு உபதேசிப்பதும் கயிலையில்தான். இவற்றால் அறியப்படும் உண்மை யாதெனில் அறிவார்ந்த மக்கள் கூடும் இடம் என்பதும் அது ஞானத்தேடலுக்கு உகந்த இடம் என்பதும் புராணவகையில் ஆன்றோர்களால் அடையாளப்படுத்தப்பட்ட இடம் கயிலாயம் எனத் தெரிகிறது.

இங்ஙனமாக அறிவுத்தேடலுக்கு அடையாளமான கயிலை பற்றிய குறிப்பை வெறும் கற்பனை என்பதாகத் தள்ளிவிடமுடியாது. மண்ணைத் தோண்டி தங்கம் எடுப்பதைப் போன்ற பக்குவத்தில் புராணக்கருத்துகளைப் புரிந்து கொள்ள வேண்டும். எனவே புராணங்களை அந்தக் காலத்து ஞானப் புதையல்களைப் பதப்படுத்தி வைத்த ஆன்மீகத் தாழிகளாகக் கருதலாம். அந்த ஞானப் புதையல்களில் ஒன்றுதான் கயிலாயம் என்ற ஆன்மீகத் தங்கம். தங்கத்தை அவரவர் விருப்பத்திற்கேற்ப வளைத்து அணிகலன்களாக்கிக் கொள்வதுபோல இக்கயிலாயம் என்ற தங்கத்தாலான பல்வேறு அணிகலன்களுள் இராவணன் கயிலையை எடுத்த குறிப்பு என்பதும் ஒன்றாகும்.

ஆண்டவனைக் கண்டு வணங்கிவரக் கயிலைக்குச் சென்ற இராவணன் மலையைப் பார்க்கிறான். அளக்கவியலா அளவும் அதன் கெம்பீரமும் இராவணனின் உள்ளத்தில் ஏதோ ஒரு மயக்கத்தை ஏற்படுத்தி விட்டன. ஆண்டவன் இருக்கும் மலைதான் அது என்பதை மறந்தான். தமது வழிபாட்டிற்குத் தடையாய்த்தன்முன் நிற்பதாக அம்மலையைக் கற்பித்துக் கொண்டான். அந்தத் திரிபுணர்ச்சியால் வழிபாட்டை மறந்தான். தன்முன் தடையாக நின்ற மலையைத் தூக்கி எறிந்துவிட்டுக் கயிலைக்குப் போக நினைத்தான். ஆர்ப்பறியும் அதட்டலும் உள்ளத்தைக் கவ்வின. அந்த ஆவேசஅசுரத்தனத்தால் கர்வம் தலைக்கேறியது. மின்னல் வேகத்தில் மலையைத் தூக்க முனைந்தான். அசைந்தது மலை, ஆடின அதில் உள்ள எல்லாம். அந்த ஆட்டத்தின் அச்சத்திற்கு உமாதேவியும் தப்பவில்லை. அடைக்கலம் தேடிய அவள் சிவனைத்தழுவிக் கொண்டாள்.

எப்போதும் ஆடிக்கொண்டே இருந்த ஆண்டவன் மட்டும் அசையவில்லை. அம்பிகையே அச்சப்பட்டுப் புகலிடம் தேடினாள் என்றால் கொடிய அந்த ஆட்டத்திற்கான காரணம் தெரிய வந்ததும் அதற்கான பரிகாரம் செய்ய எண்ணிய இறைவன் தன் கால் பெருவிரலால் ஒரு அழுத்தம் கொடுத்தான். அந்த அழுத்தத்தின் முழுபலமும் இராவணனைக் கதிகலங்கச் செய்தன. அவன் பொறியில் சிக்கிய எலியானான், ஏங்கினான். கூக்குரலிட்டான். எவரும் உதவிக்கு முன்வரவில்லை. ஓலமிட்ட அவனின் குரல் ஒருவனின் தவத்தைக் கலைத்தது. அவலக்குரல் கேட்ட வாகீசமுனி என்பவர் காரணம் ஆராயாமல் இராவணனுக்கு உதவ முன்வந்தார்.

அவரின் இரக்ககுணம் பின்னர் அவருக்கே சாபத்தைத் தேடிக்கொடுத்தது. இறைவன் இசைப்பிரியன் என்ற அவரின் அறிவுறுத்தலால் தெளிவடைந்த இராவணன் சாமகீதம் பாடினான். இசைகேட்ட மயக்கில் கால்விரலின் இறுக்கம் தளர்ந்தது. இராவணன் தப்பித்தான். தன் குறை உணர்ந்தான். மன்னிப்பு வேண்டினான். இறைவனின் கருணை பரிசாக அமைந்தது. அந்தோ வாகீசமுனிவரும் பூலோகத்தில் பிறப்பதற்கான சாபத்தைப் பெற்றார்.

மேற்கூறியதெல்லாம் புராணமாயினும் இவர்களின் மானுட வாழ்வியலுக்கான கருத்துப் புதையல் உள்ளதை நுட்பமாக உணரவேண்டும். ஆண்டவனுக்குப் பக்தி செலுத்துகையில் ஆரவாரமும் ஆணவமும் இருக்கக் கூடாது. அன்பும் அமைதியுமே

பக்தியின் அடையாளம். இராவணனது துன்பத்தைக் கண்டு வாகீசரது மனம் இரங்கினாலும் அவர் அவனது துன்பத்திற்கான காரணம் அறியாமல் இறைவனின் எளிவந்த ரகசியத்தை வெளிப்படுத்திய சிறுபிழைக்காகச் சாபத்திற்கு உள்ளாகிறார்.

இவைகள் யாவும் வாழ்வில் காணும் உண்மைகளேயானாலும் அவைகள் புராணம் என்ற பேரால் எழுத்தாகும்போது சிரஞ்சீவித்தன்மை பெற்று விடுகின்றன. இவ்வுண்மையின் குறியீடாகவே திருநாவுக்கரசர் தாம்பாடிய தேவாரப் பதிகந்தோறும் அதன் இறுதிப்பாடலை இராவணன் கயிலை மலையைத் தூக்கித் துன்பப்பட்டதாகப் பதிவு செய்கிறார். வரையெடுத்த பொருந்தா அரக்கன் தன் உடல் நெரித்தாய் என்கிறது திருப்பாதிரிப்புலியூர்ப் பதிக இறுதிப்பாடல். இதனால் தவறு செய்பவன் தண்டிக்கப்படுவான் என்பது தெளிவானாலும் அத்தவற்றை உணர்ந்து திருந்தினால் இறைவனது அருள் கிட்டும் என்பதும் ஈண்டுள்ள ஆன்மீகப் புதையலான மறுபக்கக் கருத்து. இவ்வுண்மையைக் கீழ்க்காணும்பாடல் உறுதிப்படுத்துகிறது.

**அறிவிலா அரக்க னோடி அருவரை எடுக்க லுற்று**
**முறுக்கினான் முறுகக் கண்டு மூதறி வாளன் நோக்கி**
**நிறுவினான் சிறுவிரால் நெரிந்துபோய் நிலத்தில் வீழ**
**அறிவினால் அருள்கள் செய்தான் திருவையாறமர்ந்த தேனே.**

இதனால்தான் கயிலாயத்திற்குள்ள பல பெயர்களில் நொடித்தான்மலை என்பதும் ஒன்றாகக் கூறப்பட்டது. இராவணனைப் போலவே பிரமன் முருகனால் அறிவுத்தெளிவடையும் ஒரு புராண நிகழ்ச்சியும் கயிலையில் நடந்ததாகக் கந்தபுராணம் கூறும்.

ஓம் என்னும் சொல்லுக்குப் பொருள் தெரியாத பிரமன் முருகனால் சிறைப்படுத்தப்படுகிறான். இது கற்பவை கசடறக் கற்க என்ற கருத்தை வற்புறுத்த எழுந்த கதை. இதுபோலவே உபதேசம் கேட்பதில் அலட்சியமாக இருந்த அம்பிகையைப் பரதவர் குலத்தில் பிறக்கும்படி இறைவன் சாபம் இடுவதாகத் திருவிளையாடல் புராணம்

(வலைவீசியப்படலம்) கூறுகிறது. கல்வி கற்பதில் அலட்சியம் காட்டக்கூடாது எனக் கடவுள்களே மானுடர்களுக்கு வழிகாட்டியாக இருந்ததாகக் கயிலையின் காட்சிகள் நினைவுபடுத்துகின்றன.

ஆக, கயிலாயக்கதையமைப்புகளில் எல்லாம் மனித வாழ்வின் பதிவுகள் உள்ளதால் கயிலாயம் என்பது சைவ சமயத்தின் ஓர் ஆன்மீகக் குறியீடு எனலாம். இதை விளம்பரப்படுத்தவே சிவாலயங்களில் நடைபெறும் பெருவிழாக்களில் (பிரம்மோற்சவம்) ஒருநாள் நிகழ்ச்சியாக கயிலாய வாகனக் காட்சியை ஆன்றோர் அமைத்தனர். எனவே கயிலாயம் என்பது ஞானக்கல்வியால் ஆன்மாவைப் பக்குவப்படுத்தும் ஓர் ஆன்மீகப் பிரகடனச் சொல் என்பது இக்கட்டுரையின் சாரம் ஆகும்.

## மாணிக்கவாசகப் பெருமான் அருளிய திருவெம்பாவை

ஆதியும் அந்தமும் இல்லா அருட்பெருஞ்
சோதியை யாம்பாடக் கேட்டேயும் வாள் தடங்கண்
மாதே! வளருதியோ? வன்செவியோ நின்செவிதான்
மாதேவன் வார்கழல்கள் வாழ்த்திய வாழ்த்தொலிபோய்
வீதிவாய்க் கேட்டலுமே விம்மிவிம்மி மெய்ம்மறந்து
போதார் அமளியின்மேல் நின்றும் புரண்டிங்ஙன்
ஏதேனுமாகாள் கிடந்தாள் என்னே! என்னே!
ஈதே எந்தோழி பரிசேலோர் எம்பாவாய்!

# உள்ளம் உடைமை உடைமை

டாக்டர் பொற்கோ



உலகப் போரின் பொழுது ஜப்பான் நாடு இருமுறை மிகப் பெரியதாக்குதலுக்கு உள்ளானது. இரு முறை அணுக்குண்டு வீசப்பட்டது. அப்போது இரண்டு நகரங்கள் நாசமாயின. அணுக்குண்டு என்ற ஒன்றன் வலிமை எவ்வளவு என்பதை ஜப்பான் நாடு நேரடியாக உணர்ந்து துன்புற்றது. அந்த நேரத்தில், மீண்டும் இந்த நாடு எழுந்து நிற்க முடியுமா, முடியாதா என்று உலகமே கவலையோடு கவனித்துக் கொண்டிருந்தது. ஆனால் அந்த நாடு மீண்டும் எழுந்து நிற்கிறது. முன்னிலும் பல மடங்கு வலிமையோடு, எழுந்து நிற்கிறது. இது எப்படிச் சாத்தியமானது? இது ஒரு பக்கம் இருக்கட்டும். நம் தமிழக வரலாற்றைப் பாருங்கள்.

நம்முடைய தமிழக வரலாற்றில் கரிகால் பெருவளத்தானைப் பற்றி நாம் படித்திருக்கிறோம். அப்படிப்பட்ட வலிமை வாய்ந்த மன்னர்கள் ஆட்சி செய்த அந்த நாடு தன் வலிமை செல்வாக்கு எல்லாவற்றையும் இழந்து விழுந்து விட்டது. சோழ மன்னர்கள் எங்கே என்று தேடுகிற நிலைமை வந்தது. அப்பொழுது விசயாலய சோழன் என்று ஒருவன் தோன்றுகிறான். அவன் முயற்சியில் சோழப் பேரரசு அரும்புகிறது. அவனுக்குப் பிறகு இராசராசன், இராசேந்திரன் முதலான சோழப் பேரரசர்கள் வரலாற்றுத் திருப்பத்தை உண்டாக்குகிறார்கள். புகழ்மிக்க சோழப் பேரரசு தலைதூக்கி நிற்கிறது இது எப்படி சாத்தியமாயிற்று?

இவற்றையெல்லாம் நாம் நினைத்துப் பார்க்கும் பொழுது ஒரு செய்தி நமக்கு உறுதிப்படுகிறது. இவையெல்லாம் சாத்தியமாவதற்கு உதவியாக இருந்தது மனத்தெம்பு, மன வலிமை அதுதான் அடிப்படை என்பதை எல்லோரும் தெரிந்து கொள்ள வேண்டும். மனித சமுதாய வரலாற்றைப் பாருங்கள். மனிதன் தோன்றிய போதே அணுக்குண்டோடு தோன்றவில்லை. மாட மாளிகையோடு தோன்றவில்லை. ஆகாய விமானத்தோடு பிறக்கவில்லை. சமுதாய வரலாற்றில் மனிதன் படிப்படியாகத் தன் மனத் தெம்பினால், அறிவு வலிமையால் பல சாதனைகளைப் படைத்திருக்கிறான். இதைப் புரிந்து கொண்டால் மனிதன் தேடவேண்டியது எது என்பதில் ஒரு தெளிவு பிறக்கும். அந்தத் தெளிவோடு மனிதன் தேடுகிற பொருள் அவனை வாழவைப்பதாக அவனை உயர்த்துவதாக இருக்க வேண்டுமே தவிர அவனுக்கு விலங்கு பூட்டுவதாக

## பஞ்சவடி என்பது யாது?

பஞ்சவடி என்பது, அகத்திய முனிவரிடம் வில் முதலிய படைக்கலங்களைப் பெற்ற பிறகு, அவர் தெரிவித்தபடி இராமன் சென்று தங்கியிருந்த இடம். இத்தலம் அகண்ட கோதாவரிக் கரையில் நாசிகாத் திரியம்பகம் என்னும் தலத்திற்கு அருகிலுள்ளது.

**“ஓங்குமர னோங்கிமலை யோங்கிமண மோங்கிப்**
**பூங்குலை குலாவுகுளிர் சோலையுடைய விம்மித்**
**தூங்குதிரை யாறுதவழ் சூழலதொர் குன்றின்**
**பாங்கருள தாலுறையுள் பஞ்சவடி மஞ்ச!”**
- கம்பராமாயணம்

பஞ்சவடி என்பது, தலைமயிரினால் அகலமாகப் பின்னல் செய்த மயிர்க் கயிற்றுப் பூணூல் வடத்தையும் குறிக்கும். இறைவன் தன் மார்பில் பஞ்சவடி தரித்துள்ளான். 'மயிர்க் கயிறு தரித்தான் தன்னை' 'பஞ்சவடி மார்பினானை' எனத் தேவாரப் பாடல்கள் குறிப்பிடுதல் காணலாம்.

சிவனடியார்களும், மயிர்க்கயிற்றாலியன்ற பூணூல் வடமாகிய பஞ்சவடியை மார்பில் அணிந்து கொள்வது உண்டு. மானக்கஞ்சாறர் என்னும் நாயனார், திருமணக் கோலத்திலிருந்த தமது மகளின் தலை மயிரை அரிந்து, பஞ்சவடியாகப் பயன்படுவதன் பொருட்டு, அடியவர் வடிவில் வந்த சிவபிரானுக்குக் கொடுத்து அருள் பெற்றார் என்பது வரலாறு.

**“தஞ்சரணத் திடைப்பணிந்து தாழ்ந்தெழுந்த மடக்கொடிதன்**
**மஞ்சுதழைத் தெனவளர்ந்த மலர்க்கூந்தற் புறநோக்கி,**
**அஞ்சலிமெய்த் தொண்டரைப் பார்த்து அணங்கிவளின் மயிர்நமக்குப்**
**பஞ்சவடிக் காம் என்றார் பரவ அடித் தலங்கொடுப்பார்.”**
- பெரியபுராணம்.

இருக்கக்கூடாது. நாம் என்ன செய்கிறோம் இப்போது, இடைவிடாமல் தொடர்ந்து அமைதி இல்லாமல் பொருள்! பொருள்! பொருள்! என்று பொருளைத் தேடுகிறோம். பொருள் தேவையானது என்பதில் ஐயமில்லை.ஆனால் அந்தப் பொருளை ஏன் தேடுகிறோம் என்பதில் தெளிவு வேண்டும்.

மிகப்பல ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த திருவள்ளுவர் இதில் தெளிவாக இருந்து ஒரு கருத்தைச் சொல்லுகிறார். அந்தக் கருத்து திரும்பத் திரும்ப நாம் நினைத்துப் போற்றத் தக்கதாக இருக்கிறது.

''உள்ளம் உடைமை உடைமை
பொருளுடைமை
நில்லாது நீங்கி விடும்''

என்று சொல்லுகிறார். உடைமை என்று சொல்லும் பொழுதே ஒன்றை நாம் நினைவு கொள்ள வேண்டும். உடைமை என்பது வேறு, உரிமை என்பது வேறு, உரிமையைப் பற்றிப் பேசவில்லை. உடைமையைப் பற்றிப் பேசுகிறார். உடைமை என்று நாம் கருதுவதெல்லாம் நம்மிடம் உள்ள பொருள்கள். பொன், பொருள், நிலம், வீடு இவைகள்தான். இந்த உடைமைகள் எல்லாம் மனிதன் உண்டாக்கிய உடைமைகள். இவற்றுக்கு முன்னே அவனிடம் இருக்க வேண்டிய உடைமை ஒன்று உண்டு. அது என்ன உடைமை? அதுதான் உள்ளம். அது என்ன உள்ளம்? சோர்வு வந்தபோது தளர்ந்து கீழே விழுந்துவிடாமல் மறுபடி மறுபடித் தலைதூக்கி அவனை நிமிர்ந்து நிற்கச் செய்கிற ஒரு ஆற்றல்தான் உள்ளம். அந்த உள்ளம் அவனிடம் இருக்கவேண்டும். அதை ஊக்கம் என்றும் சொல்லலாம். அந்த ஊக்கந்தான் மனிதனைத் தூக்கி நிறுத்துகிறது. சமுதாயத்தை வாழவைக்கிறது.

அது இல்லாமல் மற்ற உடைமைகள் எவ்வளவு இருந்தாலும் பயனில்லை. இந்த நூற்றாண்டிலும் இது நாம் உணர வேண்டிய உண்மை

''உள்ளம் உடைமை உடைமை
பொருளுடைமை
நில்லாது நீங்கி விடும்''

# "எண்ணச் சிதறல்"

நவம்பர் 2006 இதழின் மூலம் சமயத் துறையில் அங்கீகரிக்கப்பட்ட ஆலய தாவரங்களைப் பற்றி துல்லியமாக செய்திகள் கிடைத்துள்ளது மகிழ்ச்சி. வாரியாரின் கேள்வி பதில் விளக்கமாக உள்ளது. அண்ணாமலை உண்ணாமலை படம் சிறப்பு.

த.புண்ணியகோடி
செய்யாறு.

கேள்வி பதில் பகுதியில் இடம் பெற்றிருந்த வள்ளல்கள் பற்றிய ஆசிரியரின் பதில், கடை ஏழு வள்ளல்களைப் பற்றி மட்டுமே அறிந்து வைத்திருக்கும் என் போன்ற பலரை நிச்சயம் வியப்பில் ஆழ்த்தியிருக்கும். காரணம் முதல் ஏழு மற்றும் இடை ஏழு வள்ளல்களைப் பற்றிய கூடுதல் தகவல்கள்தான்.

ஐப்பசி மாதத்தில் அரங்கேறும் கடை முழுக்கு - முட முழுக்கு வைபவம் குறித்த தகவல்கள், அவ்விரண்டு வகையான நீராடல் நிகழ்வின் ஆன்மீகப் பின்னணியை உலகிற்கு எடுத்துரைத்திருந்தன.

இரா. வளையாபதி
தோட்டக்குறிச்சி

அன்னையிடம் வேல் வாங்கி
அசுரனைச் சம்மாரம் செய்த
சிக்கல் சிங்கார வேலரின்
அற்புதங்கள், மெய் சிலிர்க்க
வைத்தது.

கனகசபாபதி
ஆதம்பாக்கம்.

# சிவபெருமானின் முழுமுதற் தன்மை

எம்.குப்புசாமி B.E., M.S (U.S.A)

உலகிலுள்ள எல்லாச் சமயங்களுக்கும் ஆதியாய் நிற்பது நம் இந்திய நாட்டில் மிகப்பழங் காலத்திலேயே தோன்றி வளர்ந்த இறைநெறியே என்று நாமனைவரும் தெரிந்துள்ளோம். காலப் போக்கில் இறையருளால் இந்நெறி மக்களெல்லோரையும் உய்விப்பதற்காகப் பல்வேறு வகைகளில் விரிவடைந்து, அரசர்களும், ஆன்றோர்களும் அவ்வப்போது கோயில்கள் எடுத்தும், சொற்பொழிவுகள், இன்னிசைப் பாடல்கள் இவற்றைக் கைக்கொண்டும் பொதுமக்களுக்கு இறையுணர்வு மேலிடச் செய்து வந்தனர். அவர்களுள் எல்லாம் மூத்தவராகிய அப்பர் பெருமான் (7ம் நூற்றாண்டு) பலதிருக் கோயில்களுக்குச் சென்று, இறைவன் திருவருளைப் பெற்று, ஏனையோரும் பயன் பெறுமாறு தேவாரத் தீந்தமிழ்ப் பாடல்கள் செய்து தொண்டாற்றினார்.

இப்பெருமானார் சிதம்பரம் என வழங்கி வரும் திருத்தில்லையூர் அருகில் வந்தபோதே, 'என்று வந்தாய்' என்னும் 'திருக்குறிப்பு ஒலி' வானில் எழுந்தது.

(ஒன்றி இருந்து நினைமின்கள் எனத் தொடங்கும் தேவாரப் பாடல் காண்க)

**''செய்ஞ்ஞின்ற நீல மலர்கின்ற தில்லைச் சிற்றம் பலவன்**

**மைஞ்ஞின்ற வொண்கண் மலைமகள் கண்டு மகிழ்ந்து நிற்க**

**நெய்ஞ்ஞின் றெரியும் விளக்கொத்த நீல மணிமிடற்றான்**

**கைந்நின்ற ஆடல்கண் டாற்பின்னைக் கண்கொண்டு காண்பதென்னே.''**

இவ்வாறு தில்லையூர்ச் சிறப்பினை வெகுவாக எடுத்தோதுவதன் உட்பொருள் எதுவோஎன ஆராய்தல் நலம்.

1. சிதம்பரம் ஆகாயத்தலம் என்பர். நடராஜப் பெருமானின் பொற் சபையை அடுத்த அறையில் இறைவன், உருவம் ஒன்றும் இல்லாத அருவ நிலையினன் என்பதை விளக்கும் வகையில் பொன்னாலாய வில்வமாலையே இருக்கக் காண்கிறோம். உலகிலுள்ள பல்வேறு சமயத்தினரும்இவ்விளக்கம் கண்டு, நம் நாட்டின் கடவுள் நெறியே தலையாய நெறி என வியந்து போற்றுகின்றனர்.

2. நடராஜர் சிலையில் படைத்தல், காத்தல், துடைத்தல், மறைத்தல், அருளல் (சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம், திரோபவம், அனுக்கிரகம், ) என்னும் ஐந்தொழில்களும் ஒருசேர ஒருவரே நிகழ்த்தி வரும் திருக்குறிப்பு உள்ளது. உலகத் தோற்றம், உடுக்கை ஓசையினால் நிகழ்ந்தது. எனவே ஓர் வலக்கையில் துடி முழக்கம். மற்றோர் வலக்கையில் (அபயம்) அடைக்கலக் குறிப்பு. இடக்கையில் அக்னி, சம்ஹாரக் குறிப்பு. மற்றொர் இடக்கை, திருவடியே அடைக்கலம் எனச் சுட்டுமாறு உள்ளது. வலக்கால் ஆணவம் அடக்குதல், முன்வினைகளின் நினைப்பைத் தடுத்தல், திரை மறைப்புப் போன்ற திரோபவ சக்தியைக் காட்டல், இடக்கால் தூக்கிய திருவடி, வீடுபேற்றினைக் குறிப்பது. இந்த அமைப்பு இறையுண்மையினையும், அவனது ஐந்தொழில் விவரத்தையும், மறைமுகமாக நமக்குத் தெரிவிக்கின்றது.

3. அப்பர் பிரான் பாடல்களில் மேலுமோர் சிறப்பு உண்டு. இப்பாடல்களில் அருள் நெறியே இறைவனுக்கு உகந்த நெறி என்னும் கருத்து, பரவலாகக் காணப்படுகின்றது. உயிர் இரக்கமே ஆன்மாக்களை உய்விக்கும். சரியை



ஞானசம்பந்தர் திருநாவுக்கரசர் சுந்தரமூர்த்தி மாணிக்கவாசகர்

நெறியில் நின்று சிவப்பேறு பெற்றார் இப்பெருமகனார்.

அப்பர் சுவாமிகள் நேரில் சென்று வழிபட்ட தலங்களும், தொலைவிலிருந்தே (மானசீகமாக) மனதில் வழிபட்ட தலங்களும் மிகப்பல.அவர் அருளிச் செய்த பாடல்கள் மூன்று திருமுறைகளாக (நான்கு, ஐந்து, ஆறு) அழைக்கப்பெற்றுள்ளன. இவையேயன்றி, நம் கையில் கிடைக்காமல் செல்லரித்துப் போன பாடல்களும் மிகப்பலவே. இதுபோலவே சிவாலயங்கள் பல வழிபாடின்றி மண்ணில் மறைந்து கிடப்பதுவும், புதை பொருள் ஆராய்ச்சியாளர்கள் வாயிலாய்த் தெரிகின்றோம். இவற்றைக் கண்டெடுத்து உரிய பூசனைக்கு அங்கங்கே, அருகில் வாழும் பெருமக்கள் ஏற்பாடு செய்தல் பெரும் புண்ணியமாகும். 'இறைவன் கிளர்கின்ற காலம் இக்காலம்' என்று மாணிக்க வாசகரும் 'சுடர்விட்டுளன் எங்கள் சோதி' என்று திருஞானசம்பந்தரும் பாடியுள்ளதற்கேற்ப, இப்போது பல பழங்காலக் கோயில்கள் புதுப்பிக்கப்பட்டு வருகின்றன. இறைவன் திருவுள்ளம்.

'சிவனை ஒக்கும் தெய்வம் தேடினும் இல்லை' - திருமூலர்

மூவர்கோன், பிறவாயாக்கைப் பெரியோன், மேலோர்க்கும் மேலோர்க்கும் மேலோனோன்காண் என்றிவ்வாறாகச் சான்றோர்களால் போற்றப்பெறும் சிவபரம்பொருளின் உண்மைநிலையைச் செவ்விதின் தெரிந்து கொள்ளுதல் இந்நிலவுலகினர் அனைவருக்கும் உரிய கடனாகின்றது. ஏனெனில் சமய உண்மைகளை ஆராய்ந்து பாராது, கண்டதே காட்சி, கொண்டதே கோலம் என மருள்பட உணர்ந்து, வெறும் சமயச்சழக்கர்களாகி, ஒருவரையொருவர் தாக்கிப் போர் செய்து இன்னல்படுவதோடு, இம்மனிதப் பிறவியின் பயனை எய்தாது, மீண்டும் மீண்டும் பிறந்து, இறந்து உழல்பவரே இவ்வுலகில் பெருவாரியாய் உள்ளனர். 'இத்தேவர் அத்தேவர் என்று போரிடும் பித்தரைக் காணில் நகுமெங்கள் பேர்நந்தி' என்னும் திருமந்திரச் செய்யுளை நினைவு கூர்க. (நந்தி - சிவபெருமான், நந்தி நாமம் நமச்சிவாயவே)

உலகர் பலரும் தத்தம் சமயத்தையே வியந்து போற்றி அனைவரும் தம் நெறியில் சேருமாறு செய்யப் பெரிதும் முயல்கின்றனர். 'நாமும் அவ்வாறே சமயப்பரப்பு வேலை செய்ய வேண்டியது தானே' என்று நம் நாட்டிலுள்ளோரும் நினைக்கத் தலைப்படுகின்றனர். ஆனால் மிகப்

பழமையான நமது சைவ சமயம் மிகப்புதுமையானதும், மிகச் சிறந்த கோட்பாட்டினையுடையதும் ஆகும் என்பதை நடுநிலை நின்று எடுத்துரைப்பவர் சிலரே. சைவ சமயம் பிற சமயக் கருத்துக்கள் அனைத்தையும் தழுவிக் கொண்டு (உள்ளடக்கிக் கொண்டு) முடிந்த முடிவைத் தெரிவிப்பதாகும். 'Saivism is the most liberal of all ' எனப் புகழ்பெற்ற வரலாற்றுப் பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரி அவர்கள் உரைத்துள்ளமை ஆழமாகக்கருத்தில் கொள்ளத்தக்கது.

*(அத்வைதம் சதுர்த்தம் பிரம்மவிஷ்ணு ருத்ராதீத மேகமாசஸ்யம் பகவந்தம் சிவம்)*

என வரும் பஸ்மஜாபால உபநிஷத்தின் வாயிலாக, 'ஒருவனே தேவன், ஒன்றே குலம்' என்பதும், சிவபரம்பொருள் என்ற அடி முடியில்லாத ஒருவன் உளன் என்பதும் அவனே முத்தொழில்களையும் (படைத்தல், காத்தல், ஒடுக்கல்) செய்விப்பன் என்பதுவும் தெரிவிக்கப் பெற்றுள்ளது. அவனே பகவான் சிவன்.

சிவபெருமானுடைய உருவ அடையாளங்களாகிய புலித்தோல் முதலியவற்றை உருத்திரர்களும் கொண்டு இயங்குவதால், இதைத் தவறாகப் புரிந்து கொண்டு, சிவபிரான் அழித்தற் கடவுள் என பிழைபட உரைத்து, எழுதியும் உரை நிகழ்த்தியும் வருபவர் மிகப்பலர். இதனாற்றான் சைவ சமயத்தின் ஒப்பற்ற நல்விளக்கங்கள் மக்களிடையே பெருவாரியாகப் பரவவில்லை. மக்களுள் சிறந்தோரை விஞ்ஞானகலர் (மாயை, கன்மம் இவற்றினின்று நீங்கியவர்) என்பது சைவநெறி. அவருள் ஆணவ மலம் இன்னும் தங்கி இருக்கின்றமையால், அவர்கள் இறைவனோடு ஒப்ப வைத்து எண்ணப்படுவதற்கு உரியவராகார். அவர்கள் சிற்சில வேளைகளில் மயக்க உணர்வு மேலிட்டுப் பல பிழைகள் செய்யவும் கூடும். அவ்வாறு பிழை செய்யும் போது, அவர்களைக் கடவுளென்று நினைத்தோரெல்லாம், 'என்ன இது! கடவுளரே இவ்வாறு செய்தால், நாம் இவ்வாறு செய்வதில் தவறில்லையே' என்று நினைக்கத் தொடங்குவர். இதனால் தான் நாட்டில் குழப்பங்கள் மேலோங்குகின்றன. நேர்மை தவறாத சிவநெறிச் சான்றோர்களெல்லாம் இதை எண்ணிப் பெரிதும் இரங்குகின்றார்கள். இவ்வுண்மையினை எல்லோரும் ஆழ்ந்து ஆராய்ந்து பார்த்தல் வேண்டும்.

சிவபெருமானின் முழுமுதற்றன்மையை மேலும் வலியுறுத்துகின்றது. பகவத்கீதை - 18ம் அத்தியாயம். ஸ்ரீ கிருஷ்ணன், அருச்சுனனைச் சிவபிரானிடம் அழைத்துச் சென்று 'இவரே முழுமுதல், அவரையொப்பார் எவருமிலர்' என்று அறிவுறுத்திப் பாசுபத அஸ்திரம் வாங்கிக் கொடுத்த வரலாற்றினை இந்த அத்தியாயத்தில் காணலாம்.இன்னுமொன்று காண்கின்றோம். முசுகுந்தன் என்னும் அரசன் இந்திரனிடம் இறவா வரம் வேண்டுமென்று கேட்டபோது, இந்த வரத்தைத் தருபவர் சிவபெருமான் ஒருவரே என்று கூறியதை நாம் தெளித்துள்ளோம். இவையெல்லாம் நம் முன்னோர்களின் நூல்கள் வழியாகத் தெரிகின்றோம். இவையன்றியும், அறிவியல் கண் கொண்டு பார்க்கும் போதும், அண்டங்களையெல்லாம் படைத்துக் காத்துத் துடைப்பவன் ஒருவனே ஆதல் வேண்டும் என்றும், அவன் சங்கற்ப மாத்திரையானே எல்லாத் தொழில்களும் செய்ய வல்லவன் என்றும், அவன் பிறப்பு, இறப்பு இல்லாதவன் என்றும், பல உண்மைகள் நமக்கு எளிதின் தெளிவாகின்றன. அவனேசிவ பரம்பொருள்.

''எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன்றறியேன் பராபரமே!''

- தாயுமானவர்

'நமச்சிவாய வாழ்க நாதன்றாள் வாழ்க'

# திருமந்திர உபதேசம்

திருமந்திரச்செல்வர் டி.வி. வெங்கட்ராமன், இ.ஆ.ப. (ஓய்வு)


திருமூலதேவ நாயனார்

''மலங்களைந்தாமென மாற்றி அருளி
தலங்களைத் தரனற் சதாசிவமான
புலங்களைத் தானய் பொது வினுள் நந்தி
நலங் களைத் தானுள் நயந்தான் அறிந்தே''

*(திருமந்திரம் 118)*

முந்தைய மந்திரத்தில் திருமூலர், ஞானாசாரியனின் தோற்றத்தில், எவ்வாறு உயிரானது, மலங்கள் மற்றதாகி விடுகிறது என்பதை சூரிய காந்தக் கல்லை உதாரணமாக எடுத்துக் கொண்டு விளக்கினார்.

மும்மலங்களையும் முழுமையாகத் தாங்கி வருபவர்கள் சகலர்கள் என்று சொல்லப்படுகிற உயிர்கள். அவைகளுடைய பக்குவம் படிப்படியாக வளர்ச்சி அடைகிறது. அந்த வளர்ச்சிக்கு வித்திடுவது இறைவனுடைய திருவருளே. தக்க நேரத்தில், ஞானகுரு ஒருவனை முன் வைத்து, திருவருள் உயிரின் பாதையை, தூய அருளொளியால் விளக்கி. வழிகாட்டிச் செல்கிறது. இறைவன் இதை உயிரின் நலனுக்காகவே செய்கிறான் என்பது தெளிவு.

இறைவன் என்ன செய்கிறான்? அருள்பாலிக்கின்றான். எப்போதும், எவ்விடத்தும், அவனுடைய மறைப்புச் சக்தியும் அருட்சக்தியும், உயிர்கள் தத்தம் வினைகளை அனுபவித்து அவற்றிலிருந்து விடுபட்டு, தனது திருவடிகளை அடையும் வரை துணைபுரிந்து, உதவுகின்றன. இதற்காக படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளுதல் ஆகிய பணிகள் சதா நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. அதற்க்கெல்லாம் மூல காரணாக இருப்பது சிவப்பரம் பொருள். யாவர்க்கும் பொதுவாக, இந்த இயக்கம் நடைபெறுவதை ''பொதுவினுள் நந்தி'' என்கிறார் திருமூலர். அதாவது சொரூப நிலையில் சத், சித் ஆனந்தப் பொருளாக இருக்கும் பரசிவம் தடத்த நிலைக்குவந்து, தனது இச்சா, கிரியா, ஞான சக்திகளை பராசக்தியின் வழியாகப் பிரயோகிக்கின்றான். சுத்த, அசுத்த, பிரக்ருதி மாயை ஆகியவற்றால் தன்னை வெளிப்படுத்திக் கொள்கிறான். தனது ஐந்தொழில் இயக்கத்தின் வழியாக, உயிர்களுடைய இயக்கத்தில் புகுந்து கொள்கிறான். இது தடத்த நிலையில் அவன் பொதுவாகச் செய்யும் பணியாகும். உயிர்களின் பக்குவத்திற்கேற்ப இந்தப் பணி நடைபெறுகிறது.

இதுவே, அவன் செய்யும் தாங்குதலாகிய தொழில் இதில் பாரபட்சமில்லை. இதில் அவன் காட்டும் நீதி உலகளாவியது. இதை அசையும் பொருள்கள், அசையாப் பெருள்கள் எல்லாவற்றையும் தழுவி நிற்கும் ஒரு நீதி அமைப்பு என்பார்கள் இதை. நமக்கு வினை COMIC JUSTICE என்பார்கள். நமக்கு வினை அனுபவத்தைக் கொடுப்பதும் அதுவே.

இறைவன் தாங்குகின்றான் என்றால் அதற்கு அடிப்படையாக அமைவது அறம். இறைவனைத் தாங்குவது அறம். இறைவன்

அறத்தின் மீது வீற்றிருக்கின்றான் என்றால் இறைவன், தான் தந்த அறநெறியை மீற மாட்டான் என்பதே பொருள். இது சைவத்தின் சிறப்பாகும். இறைவனை அறிந்தவர்கள் அறத்தை தம்முன் தாங்கி நிற்பார்கள் என்கிறார் திருமூலர்.

**''தாமறிவார் அறந்தாங்கி நின்றார் அவர்''**

அறத்தை அறியாதவர்கள் இறைவனுடைய திருவடிகளை நினைக்கும் திறமையும் பெற மாட்டார்கள் என்கிறார் திருமூலர்.

**''அறம் அறியார் அண்ணல் பாதம்**
**நினையுந் திறம் அறியார்''**

எனவே இத்தொழில் இயக்கம் அறத்தின் அடிப்படையில் நடைபெறுகிறது என்பது தெளிவு.

சிவப்பரம் பொருளினுடைய அருளாட்சி எவ்வாறு தன்னை வெளிப்படுத்திக் கொள்கிறது?.

நமது வினைகளைக் கெடுத்து உண்மை அறிவை தழைக்கச் செய்கின்ற நந்தி, ''நற்சதாசிவமான'' (இரண்டாம் அடி) என்றார். அதாவது, சதாசிவன் முதலாக நின்ற நிலை என்று பொருள் படும்.

சர்வசங்கார காலத்தில், இறைவன் இருப்பது உண்மை நிலை. அப்போது அவன் பரமசிவன் என்று சொல்லப்படுவான். அவனுடைய சக்தி பராசக்தி என்று பெயர் பெற்று நிற்கும்.

உலகத்தை தோற்றுவிக்க விரும்பிய இறைவன் தனது சக்தியேயான சுத்தமாயையை ஞானசக்தியால் நோக்குவான். அப்போது அவன் சிவன் எனப்பெயர் பெறுவான். நாத தத்துவம் என்றும் பெயர் உண்டு.

அடுத்து, இறைவன் சுத்தமாயையை கிரியாசக்தியால் செயல் படக் கருதுவான். சக்தி தத்துவம் தோன்றும் விந்து தத்துவம் என்றும் சொல்லப்படும். இதுவரை இறைவனுடைய நோக்கு பொதுவாக இருக்கும்.

இறைவன் தனது ஞான சக்தியால் சிறப்பாக நோக்கியும், கிரியா சக்தியால் சிறப்பாகக் கருதும் போது இறைவன் சதாசிவன் எனப் பெயர் பெறுவான். அவனுக்கு அங்கே இடமான தத்துவம் சதாசிவ தத்துவம் என்றும் சதாக்கிய தத்துவம் என்றும் பெயர் பெறும். இது உலகம் தோன்ற முதற்கட்டமாக இருக்கும் நிலையாகும். இங்குள்ள சிவன் போக நிலையில் இருப்பான். சதாசிவன் அருவுருவ மூர்த்தி உலகத்தையும், உயிர்களையும்

# அதிகாலையில் சொல்லவேண்டிய தமிழ் வேதப் பாடல்

படுக்கையிலிருந்து 'சிவாயநம என்றோ அல்லது திருச்சிற்றம்பலம் என்றோ சொல்லி எழுதல் வேண்டும். பின் பல்துலக்கி முகம் கை கால், சுத்தம் செய்து திருநீறு அணிதல் வேண்டும். ஓரிடத்தில் அமர்ந்து இப்பாடலைப் பாடித் துதித்தல் அளவிலா நன்மையை அளிக்கும்.

மேலை விதியே வினையின் பயனே
விரவார் புரமூன்று எரிசெய்தாய்
காலை எழுந்து தொழுவார் தங்கள்
கவலை களைவாய் கறைகண்டா
மாலை மதியே மலைமேல் மருந்தே
மறவேன் அடியேன் வயல் சூழ்ந்த
அலைக் கழனிப் பழனக் கச்சூர்
அலக் கோயில் அம்மானே.

- சுந்தர மூர்த்தி சுவாமிகள் -

தெளிவுரை - மேலான அறநெறியாகவும், அதன் பயனாகவும் உள்ளவனே! பகைவரது முப்புரங்களை அழித்தவனே! காலையில் எழுந்து உன்னை வணங்குபவரது மனக் கவலையை முழுவதுமாக நீக்குபவனே! நீல கண்டனே! மாலையில் தோன்றும் சந்திரனைப் போன்றவனே! திருக்கச்சூர் மலையின் மீது மருந்தீசப் பெருமானாக வீற்றிருந்து அருள் பாலிப்பவரே! கரும்பு ஆலைகள் நிறைந்த வயல்கள் சூழ்ந்த (திருக்கச்சூரில்) ஆலக் கோயிலில் விளங்கும் பெருமானே! அடியேன் உன்னை மறவேன். இன்றைய நாள் உனதருளால் நல்ல நாளாக அமைய வேண்டிப் பிரார்த்தித்து அமைகிறேன்.

திருச்சிற்றம்பலம்

நன்றி: தமிழ் வேதம்

இயக்கவைக்கும் கலைகளின் தொடக்கத்திற்கு இடமானதால் சதளம் என்றும், தான் மாயையிலிருந்து விடுபட்டிருப்பதால் நிட்களம் என்றும் சொல்லப்படும். கண்ணாடியில் பிம்பம் போல சிவனிடமிருந்து தோன்றுவது சதாக்கியம் என்பார்கள்.

சிவ சதாக்கியம், அமூர்த்தி சதாக்கியம், மூர்த்தி சதாக்கியம், கர்த்துருசதாக்கியம், கரும சதாக்கியம் என சதாக்கியம் ஐந்து வகைப்படும் என்று ஆகமங்கள் கூறுகின்றன. இவையெல்லாம், பராசக்தி, ஆதிசக்தியாகிய திரோதன சக்தி, இச்சாசக்தி, ஞானசக்தி, கிரியா சக்தி ஆகியவற்றின் பங்கும், தோற்றமும் ஆகும்.

சதாசிவமூர்த்திக்கு ஈசானம், தத்புருடம் அகோரம், வாமதேயம், சத்தியோசாதம் என்னும் ஐந்து சக்திகள் உறுப்புகளாகும். இவற்றை ஐந்து முகங்கள் என்றும் கூறுவதுண்டு.

சிவனுக்கு அருவத்திருமேனி, சதாசிவம் அருவுருவத் திருமேனி யுடையவன். உருவத்திருமேனியாக இருப்பது மகேசுரன். அருவுருவத் திருமேனியாக எல்லாவற்றிற்கும் மூலப் பொருளாக விளங்குவதால், சதாசிவன், லிங்கம் என்ற பெயர் பெற்று திருக்கோயில்களில் கருவறையில் மூலமூர்த்தியாக விளங்குகின்றான். புறத்திலும், அகத்திலும் சிறப்பாக வழிபட்டு உயர்வினைப் பெருக்கிக் கொள்வதற்குத் தகுந்த சாதனமாக அமைந்துள்ள லிங்க வழிபாடு சைவசமயம் உலகத்திற்கு தந்துள்ள ஒப்பற்ற முத்தி நெறிமார்க்கம்.

திருமூலர் பெருமான் சதாசிவலிங்கத்தின் பெருமையை ஏழாம் மந்திரத்தில் இருபத்து மூன்று மந்திரங்களால் உணர்த்துகின்றார்.

சதாசிவ வடிவம், இரண்டு திருவடி, பத்துகை, ஐந்து முகம், பதினைந்து கண்கள் உடையதாகும். இத்துடன் அதோமுகம் என்கிற கீழ் நோக்கிப் பார்த்து, அருள் பாலிக்கும் முகமும் உண்டு.

சதாசிவத்திற்குக் கீழ் மகேசுரன், உருத்திரன், விட்டுணுபிரம்மா எனவும் மேலே விந்து, நாதம், சக்தி, சிவம் எனவும் உள்ள நிலையில் சதாசிவம் ஒரு பொது மூர்த்தமாய் அமைகிறது.

**"காணாத அருவினுக்கும் உருபினுக்கும்**
**காரணமாய்**
**நீன் நாகம் அணிந்தார்க்கு நிகழ்குறியாம்**
**சிவலிங்கம்"**

என்கிறார். சேக்கிழார் பெருமான் (சாக்கிய நாயனார் புராணம்)

(தொடரும்)

## பன்னிரு திருமுறைகளும் அவற்றை அருளியவர்களும்

| | |
|---|---|
| 1, 2, 3 திருமுறைகள் | - திருஞானசம்பந்தர் அருளியவை |
| 4, 5, 6 திருமுறைகள் | - திருநாவுக்கரசர் அருளியவை |
| 7 ஆம் திருமுறை | - சுந்தரர் அருளியவை (தேவாரம்) |
| 8 ஆம் திருமுறை | - மாணிக்கவாசகர் அருளியவை (திருவாசகம்) திருக்கோவையார் |
| 9 ஆம் திருமுறை | - திருமாளிகைத்தேவர் முதலான ஏழு பேர் அருளியவை - திருவிசைப்பா, திருப்பல்லாண்டு |
| 10 ஆம் திருமுறை | - திருமூலர் அருளியது (திருமந்திரம்) |
| 11 ஆம் திருமுறை | - திருவாலவாயார் முதலான பதினொரு பேர் அருளியவை |
| 12 ஆம் திருமுறை | - சேக்கிழார் அருளியது பெரியபுராணம் (திருத்தொண்டர் புராணம்) |

# நடுநாட்டுத் திருவரங்கமும், ஜம்புகேச்சுவரமும்

அழ. முத்துப்பழனியப்பன், எம்.ஏ., பி.எல்.,



பண்டைய தமிழகம் பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. எல்லா நாடுகளுக்கும் நடுவில் இருந்த பகுதி நடுநாடு என்றும், திருமுனைப்பாடி நாடு என்றும் அழைக்கப்பட்டது. இப்பகுதி கெடிலம் ஆற்றிற்கும். தென்பெண்ணையாற்றுக்கும் இடைப்பட்ட பகுதி ஆகும்.

தமிழகச்சமய வரலாற்றில் இப்பகுதி புகழ் மிக்கது ஆகும். சைவ சமய ஆச்சார்யர்களில் அப்பரும். சுந்தரரும் தோன்றிய பகுதி இதுவே ஆகும். வரலாற்றுச் சிறப்பு மிக்க ஊர்களும், தலங்களும் இங்கு உண்டு.

தமிழகத்துப் பெரிய நதிகளில் காவிரிக்கு அடுத்த பெரிய நதி தென்பெண்ணையாறு ஆகும். காவிரி, தென்பெண்ணை என்பார் பாரதி. நடுநாட்டுத் தலங்கள் பெரும்பாலும் இந்த நதியின் கரையில் தான் உள்ளன. இந்த ஆற்றின் கரையில் உள்ள ஒரு தலம் திருவரங்கம். ஆம் திருவரங்கம் தான். ஊரின் பெயரும் திருவரங்கம், கோயிலும் அரங்கநாதன் தான். ஆழ்வார்கள் பார்த்துப் பார்த்துப் பரவசப்பட்ட அதே அரங்கன், குடதிசைமுடியை வைத்து, குணதிசையில் கால் நீட்டி, தென்புறம் நோக்கியிருக்கும் அரங்கனின் திருவுருவம் சோழநாட்டு அரங்கனைவிடப் பெரியது.

இன்றைய விழுப்புரம் மாவட்டத்தில், சங்கராபுரம் வட்டத்தில், தென்பெண்ணை ஆற்றின் கரையில் திருவரங்கம் என்ற இத்தலம் அமைந்துள்ளது. அருகாமையில் உள்ள திருக்கோயிலூரில் இருந்தும், கள்ளக்குறிச்சி - சங்கராபுரம் வழியாகவும் இத்தலத்தை அடையலாம்.

கிழக்குப் பார்த்த கோயில். சுமார் மூன்று ஏக்கர் பரப்பளவில், உயர்ந்த மதில் சுவர்களோடு இந்தக் கோயில் விரிந்து பரந்துள்ளது. இராஜகோபுரம் கட்டுவதற்கு அடித்தளம் உள்ளது. அதன் மீது சிறிய கோபுரம் அண்மையில் கட்டப்பெற்றுள்ளது. மூன்று பெரிய பிரகாரங்கள் உள்ளன.

மூன்றாவது வெளிப்பிரகாரத்தில் வடகிழக்கு மூலையில் நான்கு தளங்களுடன் ஒரு பெரிய நெற்களஞ்சியம் உள்ளது. மிகவும் பழுதடைந்து உள்ள இந்நெற்களஞ்சியத்தில்தான் இந்தக் கோயிலுக்கான நெல் சேமித்து வைக்கப்பட்டிருந்தது என்பன அறியும்போது, இந்தக் கோயிலின் கடந்த கால செல்வச்செழிப்பை அறிகிறோம்.

நெற்களஞ்சியத்தின் எதிரில் மூன்றாவது வெளிப்பிரகாரத்தில், கோதண்டராமருக்கு எனத் தனிச் சந்நிதி இருந்தது. காலத்தால் பழுதுபட்டும் போய்விட்டது இச்சந்நிதி. மிகமிக அழகிய மூர்த்திகள், இராமனின் கம்பீரமும், இலட்சுமணனின் சாத்விகமும், சீதையின் கடைக்கண் அருளும் அற்புதமாகத் தெரியும் வண்ணம் இச்சிலைகள் உள்ளன. சீதையின் தலைக்கொண்டை வித்தியாசமாகவும், அருமையாகவும் உள்ளது. அருகில் உள்ள அனுமன், பவ்ய அனுமனாக, வணங்கிய கையுடன் நிற்பதைக் காணக் கண் கோடி வேண்டும்.



இரண்டாவது பிரகாரத்தின் தென்கிழக்கு மூலையில் ஸ்ரீவரதராஜப் பெருமாள் சந்நிதி அமைந்துள்ளது.

முதற்பிரகாரத்தின் உள்ளே, கருவறையில் பாம்பணையில், பெருமாள் பள்ளி கொண்ட திருக்கோலமாய், வேறு எந்த தலத்திலும் இல்லாத வகையில் உண்மையிலே பெரிய பெருமாளாக விளங்குகிறார். தென்திசையில் தலைவைத்து, கிழக்கு நோக்கி இனிய புன்முறுவலுடன் வலதுகையை தலையணையாய் வைத்து, இடது கையால் நாபிக் கமலத்தில் தோன்றிய பிரம்மனுக்கு வேதங்களை உபதேசிக்கிறார். ஸ்ரீ தேவியின் மடியின் மீது சயனித்துள்ளார். வடதிசையில்

நீட்டிய ஒரு திருவடி பூமிதேவியின் மடியை வருடிக்கொண்டுள்ளது. இன்னொரு திருவடி ஆதிசேஷனின் வால் நுனிவளையில் உள்ளது. பெருமானின் வலதுகையைத் தாங்கி மண்டியிட்டபடி, பெரிய திருவடி எனும் கருடாழ்வார் அமைந்துள்ளார். கருவறைச் சுவர்களில், ஒளிமங்கிய நிலையில் ஓவியங்கள் உள்ளன. இவருக்கு, சந்தனாதி தைலக் காப்பு தவிர வேறு எவ்வித அபிஷேகங்களும் இல்லை.

அரங்கனைச் சேவித்து வெளியில்வரும்போது, வடக்குவாயிலில் துர்க்கையைச் சேவிக்கிறோம். துர்க்கை அரங்கனின் தங்கை என்ற முறையில் காவல் தெய்வமாக விளங்குகிறார். வெளிப்புறம், ரங்கநாயகித்தாயாருக்குத்தனிச்சந்நிதி உள்ளது. எங்கும் இல்லாத வகையில் கோயில் மேல் தளத்தில் கிருஷ்ணர் சந்நிதி ஒன்று அமைந்துள்ளது. கையில் வெண்ணெய்ப் பானைகளுடன் இவர் காட்சி தருவது கண்ணையும் கருத்தையும் கவர்கிறது. கீழே இரண்டாவது பிரகாரத்தில் தென்மேற்கு மூலையில் ஆண்டாள் சந்நிதி உள்ளது.

கோயிலில் கல்வெட்டுகள் உள்ளன. சோழர் காலம் தொடங்கி நாயக்கர் காலம் வரை, இந்த கோயில் பெற்ற கொடைகளை அவை விவரிக்கின்றன.

இதே தென்பெண்ணை ஆற்றின் வடபுறம் உள்ளது ஜம்பை என்னும் ஊர். இங்கே அழகிய சிவன் கோயில் ஜம்புநாதஈஸ்வரர் என்ற பெயரில் உள்ளது. இவ்வூரில் ஐந்து சிவாலயங்கள் இருந்தன. இப்போது ஜம்புநாதஈஸ்வரர் கோயில் மட்டுமே உள்ளது.

ஜம்புநாதர் சந்நிதியும், அகிலாண்ட ஈஸ்வரி சந்நிதியும் தனித்தனியாக உள்ளன. இரண்டுமே பழுதுபட்டு உள்ளன. சுவாமி சந்நிதி முன்புள்ள கோபுரம் அழகியது.

இக்கோயில், முதற் பராந்தக சோழனால் கட்டப்பட்டிருக்க வேண்டும். சோழர்கள், கன்னரதேவன், கோப்பெருஞ்சிங்கன், பாண்டியர், விஜயநகர் மற்றும் செஞ்சி நாயக்கர் கால கல்வெட்டுகள் மொத்தம் 135 கல்வெட்டுக்கள் கிடைக்கின்றன. இன்னும் சிலவற்றைப் படிக்க இயலவில்லை.

இக்கோயிலில் உள்ள நிருத்த மண்டபம் குறைவற நிறைவேற வேண்டும் என்று, வேண்டி, இக்கோயில் தேவரடியார் தம்பி தன் தலையைத் தானே அரிந்து கொண்டு உயிர்த்தியாகம் செய்ததாகவும், அதற்காக அவன் தம்பிக்கு நிலம் வழங்கியதாகவும் கோப்பெருஞ்சிங்கன் கல்வெட்டு கூறுகிறது.

இங்குள்ள மகிஷாசுரமர்த்தினி சிலை மேலைச் சாளுக்கியரின் கலைப் படைப்பாகும். இச்சிலை, இடப்புறத்தில் உள்ளதுவாரபாலகரின் அருகில் உள்ளது.

இங்குள்ள உற்சவத் திருமேனிகளில் ஊர் நத்தக் கொல்லையில் இருந்து கண்டு எடுக்கப்பட்ட, ஆலிலைக் கிருஷ்ணன், தவழ்ந்து வரும் பாலகிருஷ்ணன் சிலைகள் மிகவும் அழகியனவாகும்.

திருப்பணி செய்ய வேண்டிய நிலையில் உள்ளது இக்கோயில்.

இந்த ஊரில் உள்ள குன்று ஒன்றில், ஔவைக்கு நெல்லிக்கனி ஈந்த சங்க கால அதியமானின் கல்வெட்டுக் கிடைத்துள்ளது.

அசோகனின் பிராமிக் கல்வெட்டில், அவனது தென்னாட்டு எல்லை அரசர்களைக் குறிப்பிடும்போது, சோழ, பாண்டிய, சேரர்களையும் குறிப்பிட்டு சத்திய புத்திரர்களையும் குறிப்பிடுகிறான். இந்தச் சத்திய புத்திரர்கள் யார் என்பது தெரியாமல் இருந்தது.

ஜம்பை கல்வெட்டு, அந்த ஐயத்தைத் தீர்த்துள்ளது.

**"ஸதிய புதோ அதியந் நெடுமாந் அஞ்சி ஈத்த பாலி"** என்ற இந்த கல்வெட்டு சத்திய புத்திரர்கள் அதியமான்கள் தான் என்று தெளிவுபடுத்திவிட்டது.

இவ்வளவு வரலாற்றுப் பெருமையும் புராணப் பெருமையும் கொண்ட நடுநாட்டுத் திருவரங்கமும், ஜம்பையும் அன்பர்கள் வரவுக்காகக் காத்திருக்கின்றன.

# இம்மாதப் பாராயணப் பாசுரம்



*அண்டக் குலத்துக் கதிபதியாகி*
*அசுரர் இராக்கதரை*
இண்டக் குலத்தை எடுத்துக் களைந்த
இருடீகேசன் தனக்குத்
தொண்டக் குலத்தில் உள்ளீர்! வந்தடி தொழுது
ஆயிர நாமம் சொல்லிப்
பண்டைக் குலத்தைத் தவிர்த்து பல்லாண்டு பல்
லாயிரத்தாண்டு என்மினே.



- பெரியாழ்வார் திருமொழி
திருப்பல்லாண்டு

# அருள்மிகு வைத்யநாதசுவாமி திருக்கோயில் - திருமழபாடி



''பொன்னார்மேனியனே புலித்தோலை அரைக்கசைத்து
மின்னார் செஞ்சடைமேல் மிளிர்கொன்றை அணிந்தவனே
மன்னே மாமணியே மழபாடியுள் மாணிக்கமே
அன்னே உன்னையல்லால் இனியாரை நினைக்கேனே''.

சைவ சமயக் குரவர்களால் தேவாரப் பாடல் பெற்ற திருக்கோயில்களுள் என்றும் வற்றாத புதுப் புனலையுடைய பொன்னி என்னும் காவிரி நதி பாயும் சோழநாட்டில் காவிரியின் பிரிவான கொள்ளிடத்தின் வடகரையில் அரியலூர் மாவட்டத்தில் திருமழபாடி என்னும் சிறந்த தலம் உள்ளது. இதற்குத் திருமழுவாடி, மழுவை, தாலவனம் ஆகிய வேறு பெயர்களும் உள்ளன.

முற்காலத்தில் வெள்ளாற்றிற்கும் வடகாவிரிக்கும் இடையில் உள்ள பகுதி மழநாடென்றும், வடகரை மழபாடி நாடென்றும், அதை ஆண்டுவந்த மன்னர்கள் மழவராயர் என்றும், அந்நாட்டில் உள்ளவர் மழநாட்டார் என்றும் வழங்கப்பட்டு வந்ததாக நூல்களால் அறிகின்றோம். பாடி என்பது சேனைகள் தங்கியுள்ள இடம் ஆகும். மழவர்களின் சேனைகள் வாழ்ந்து வந்த இடம் மழவர்பாடி எனப் பெயர் ஏற்பட்டு அது மழபாடி என மருவி வழங்கலாயிற்று. தேவாரப் பாடல்களிலும் மழபாடி என்பதே காணப்படுகின்றது. இத்தலத்தைப் பற்றிய தமிழ்ப் புராணத்தில் இத்தலம் பனைமரத்தை மிகுதியாகக் கொண்டிருந்ததால் தாலவனம் என்றும், மார்க்கண்டேய முனிவருக்குச் சிவபெருமான் காட்சி தந்து மழு என்னும் படையைத் தாங்கி ஆடல் செய்தருளிய காரணத்தால் மழுவாடி எனப் பெயர் ஏற்பட்டதென்றும் வரலாறுகளில் வழங்கப் படுகின்றன.

**கோயிலின் அமைப்பு**

கொள்ளிடத்தின் வடகரையில் நதியின் பக்கத்திலேயே இக்கோயில் அமைந்துள்ளது. கொள்ளிட நதி இவ்விடத்தில் உத்தரவாகினியாய் (வடக்கு நோக்கிச்) செல்கிறது. கோயில் கிழக்கு நோக்கி உள்ளது. முன்னே ஓர் பெரிய கோபுரம் எழுநிலை மாடங்களுடன் விளங்குகிறது. உள்ளே 3 பிரகாரங்கள் உள்ளன. வெளியில் தேரோடும் வீதி உள்ளது. சுவாமி கோயில் தென்புறத்தில் உள்ளது. அம்மனுக்கு 2 சந்நிதிகள் உள்ளன. ஒன்று நடராஜர் சந்நிதிக்குப் பக்கத்திலும், மற்றொன்று வடபுறத்திலும் உள்ளன. சுவாமி-சுந்தராம்பிகை என்னும் இரண்டு சந்நிதிகளும் கிழக்கு நோக்கியுள்ளன.



**மூர்த்திகளின் பெயர்கள்:**

இத்தலத்தில் வீற்றிருக்கும் பெருமானுக்கு வைத்தியநாதர், வச்சிரதம்பேசுவரர், வைரத்தூண்நாதர், மழுவாடீசர் என்னும் பெயர்கள் வழங்குகின்றன. அம்பிகை சுந்தராம்பிகை (அழகம்மை), பாலாம்பிகை என்றும், விநாயகர் சுந்தர விநாயகர் என்றும் வழங்கப்பெறுவர். இந்த விநாயகர் நின்ற தோற்றம் உடையவர்.

பாலாம்பிகை சந்நிதி தெற்கு நோக்கியுள்ளது. இத்திருமேனி எந்தப்பக்கம் இருந்து நாம் பார்த்தாலும் நம்மைப் பார்த்து புன்னகை செய்வது போன்று இருக்கும்.

சந்திரனுக்குண்டான கயநோயைப் போக்கியதால் வைத்தியநாதர் என்றும், புருஷாமிருக முனிவரால் பிரதிட்டை செய்யப் பெற்ற மூலலிங்கத்தைப் பிரமன் பெயர்த்தெடுக்க முயன்றபோது வச்சிரதம்பமாக - வைரத்தூணாக விளங்கியதால் வச்சிரம்பேசுவரர், வைரத்தூண் நாதர் என்றும் பெயர்கள் வழங்கலாயின.

**ஜுரஹரர் :** இங்கு உள்ள மூர்த்திகளில் ஜுரஹரர் என்னும் சிவலிங்கத்திருமேனி மிகச் சிறப்பு வாய்ந்தது. ஜுரம் நிற்காத நிலையில் இந்த இறைவனுக்கு புழுங்கல் அரிசியில் ரசம் சாதம் செய்து படைத்தால் நோய் நீங்குதல் உறுதி.

**தீர்த்தங்கள்:**

1. இலக்குமி தீர்த்தம் : இது அம்மன் சந்நிதிக்கு எதிரில் உள்ளது. அம்பிகையின் கருணைக்கு அறிகுறியாகக் குளிர்ச்சியாயும் இனிய சுவையுடனும் விளங்குகிறது. திருமகளாகிய இலக்குமிக்கு ஒரு முனிவன் சாபத்தால் ஏற்பட்ட சரும நோய் நீங்கியதால் இத்தீர்த்தம் இலக்குமியின் பெயரால் விளங்குகிறது.

2. சிவகங்கை : இது கொள்ளிட நதியுடன் கலந்து விட்டது. கோயிலுக்கு முன்னே படித்துறையின் பக்கமாய் ஓடியது.

3. கொள்ளிடம் : (வடகாவிரி) இந்நதி இவ்விடத்தில் வடக்கு நோக்கி (உத்திர வாகினியாய்ச்) செல்கிறது.

**தலப் பெருமைகள்:**

ஊருக்கு கிழக்கில் கொள்ளிட நதிக்கரையில் கோயில் அமைந்துள்ளது. இயற்கையழகு, பொருந்தியதாயும், சோலைகள் சூழ்ந்ததாயும் உள்ளது. மூர்த்தி, தலம், தீர்த்தம் மூன்றிலும் சிறப்புடையது.

மூவராலும் பதிகம் பாடப் பெற்ற பெருமை உடையது மழபாடி. ''மழபாடியை மறந்தாயோ?'' என்று சுந்தரமூர்த்தி நாயனார்க்குச் சிவபெருமான் கனவில் நினைப்பூட்டிய சிறப்பை உடையது.

மழபாடிப் பெருமானின் மாண்புகள் தேவாரப் பாடல்களில் மிகுந்துள்ளன. ''மழபாடி என்னும் மணாளன் வயிரத்தூணே'' என்றும் ''மழபாடியுள் மாணிக்கமே'' என்றும் திருநாவுக்கரசரும், சுந்தரமூர்த்தி நாயனாரும் இறைவனைப் போற்றியுள்ளார்கள். மழபாடியைத் தலையினால் வணங்கத் தவமாகுமே என்று ஞானசம்பந்தர் துதித்துள்ளார்.

அதிவேகமாக ஓடிவரும் ஆற்று வெள்ளத்தை அணை நின்று தடுப்பது போல இத்தலத்தில் பெருமான் வச்சிரதம்பமாக வயிரத்தூணாக நின்று உயிர்களுக்கு அவ்வப்போது, எதிர்பாராது நேரிடும் துன்ப வெள்ளத்தையும் தடுத்துத் துணை புரிகின்றார். மழுவாடீசர் தம் கையிலுள்ள மழுவால் அடியார்களின் மனமாகிய நிலத்தை வளப்படுத்துகின்றார்.



**சிற்பச்சிறப்புக்கள்:**

இக்கோயிலில் உள்ள சோமஸ்கந்தர் வடிவம் ஒரே கல்லினால் ஆனது. சிற்ப வடிவில் உள்ளது. கல்யாணசுந்தரர், நந்திகேஸ்வரர், ஊர்மிளாதேவி, அகஸ்தியர், சுந்தரர் முதலியோரின் உருவங்கள் சிலையில் ஆக்கப் பெற்றுள்ளன. இவை மிகவும் பழமையானவை. தக்ஷிணாமூர்த்திக்கு அழகிய இரு சிற்பங்கள் உள்ளன. ஒன்றின் பக்கத்தில் பசுவடிவம் சேர்க்கப்பட்டிருக்கிறது. சோமஸ்கந்தர் மண்டபம் பிற்காலத்தில் ஏற்பட்டிருக்கலாம். முன்னே உள்ள அலங்கார மண்டபத்தில் சிங்கத்தூண்கள் உள்ளன. சிங்கம் தூணைத்தாங்குவதாக ஏற்படுத்தப்பட்டுள்ளது. பல்லவ அரசர்களில் நரசிம்ம பல்லவனை

நினைப்பூட்டும் வகையில் இவை ஏற்பட்டுள்ளன. பழமையான வெண்கலப் பாவை விளக்கு சுவாமி சந்நிதியின் முன் உள்ளது. இரண்டாம் கோபுரத்தை அடுத்து நூற்றுக்கால் மண்டபம் உள்ளது.

**புராண வரலாறுகள்**

இத்தலத்திற்கு வடமொழியில் ஒரு புராணம் உண்டு. இதனைத் தழுவித் தமிழில் திருமழுவாடிப் புராண வசனம் என்ற நூல் உண்டு. அதில் 24 அத்தியாயங்கள் உள்ளன. பிற்காலத்தில் ஸ்ரீ கமலைஞானப் பிரகாசதேசிகர் என்பவர் திருமழுவாடிப் புராணம் என்ற நூலைச் செய்யுளில் அமைத்துப் பாடியுள்ளார். அதில் பாயிரம் முதல் அகத்தியச் சருக்கம் முடிய 8 பிரிவுகள் உள்ளன. 581 செய்யுட்களையுடையது. இவைகளுள் சில வரலாறுகள் பின்னே சுருக்கமாகக் காட்டப் பெற்றுள்ளன.

**1. வயிரத்தூணரான வரலாறு:**

முன்னொரு காலத்தில் புருடாமிருக முனிவர் தாம் தினந்தோறும் பூஜிப்பதற்கு ஓர் சிறந்த சிவலிங்கம் பெறக் கருதி எங்கும் கிடைக்காமல் சத்தியலோகம் சென்று பிரமன் பூஜித்து வந்த லிங்கத்தைக் கண்டு தமக்குக் கொடுக்குமாறு வேண்டினார். பிரமன் கொடுக்க மறுக்கவே முனிவர் காவிரிக்கு வட திசையிலுள்ள பனங்காடாயிருந்த இத்தலத்தில் வந்து கடுந்தவம் புரிந்தார். சிவபிரான் முனிவருக்குக் காட்சி கொடுத்துச் சோதி மயமான ஒரு சிவலிங்கத்தைக் கொடுத்து அருளினார். முனிவரும் பூஜித்து வந்தார். பிரமன் தன்னிடமிருந்த லிங்கத்தை காணாமல் இவ்விடத்தில் இருப்பதை அறிந்து வந்து முனிவருடன் போர் செய்து மூலலிங்கத்தைத் தன் முழுவலிமையால் பெயர்க்க முயன்றான். அப்போது பெருமான் வச்சிரதம்பமாக - வயிரத் தூணாக விளங்கிப் பிரமனுக்கு காட்சி தந்து ''உத்தம மகிமையாலே உன்பதி தனிலும்போத இத்தல நமக்கன்பாகி இருத்தலால் இருந்தோம் நீயும் வைத்த பேரன்பால் நாளும் வந்தெமைப் பணிவாய்'' என்று கூறி மறைந்தார். பிரமனும் தன் இடம் சென்றான். முனிவரும் பெருமானுக்குத் திருக்கோயில் அமைத்து வழிபட்டு வரலானார்.

**2. பெருமான் மழுவேந்தி ஆடியது:**

சிவபெருமானுக்குரிய பல வடிவங்களில் நடராஜ வடிவம் ஒன்று. பதஞ்சாலியாகிய பாம்புக்கால் முனிவரும், வியாக்கியபாதராகிய புலிக்கால் முனிவரும் கண்டு தரிசிக்கப் பெருமான் தில்லையில் திருநடனம் செய்தார். அவர்களைப் போலவே மார்க்கண்டேய முனிவரும் பெருமான் திருக்கூத்தைக் கண்டு மகிழ விரும்பினார். ஞானக் கண்ணினாலன்றி அறிய முடியாத பெருமானின் பரமானந்த நடனத்தை ஊனக் கண்ணினாலும் தரிசிக்க முனிவர் விரும்பி இத்தலத்துக்கு வந்து கடுந்தவம் புரிந்தார். பெருமான் இவருடைய தவத்திற்கிரங்கி வைகாசி மாதம் விசாகம் கூடிய பௌர்ணமி நாளில் காட்சி கொடுத்துக் கையில் மழுப்படை ஏந்தித் திருநடனம் செய்தருளினார்.



மார்க்கண்டேயர் ஐந்து பேரறிவுங் கண்ணாகக் கொண்டு தரிசித்து இன்புற்றார். பெருமான் மழுவேந்தி ஆடியதால் இத்தலம் மழுவாடி எனப் பெயர்பெற்றதென்று புராணம் கூறுகின்றது. ஆண்டுதோறும் வைகாசி விசாக நாளில் திருநடனக் காட்சியளிக்கப்படுகிறது.

**3. பெருமான் வைத்தியநாதராகியது:**

தக்கனுடைய 27 கன்னிகைகளைச் சந்திரன் திருமணஞ்செய்து வாழும் நாளில் தம் மனைவியருள் உரோகிணி என்பவள்பால் மிகுந்த நேசம் பூண்டு மற்றவர்களிடம்



வெறுப்புக் காட்டி வந்தான். அவர்கள் இக்குறையைத் தம் தந்தையான தக்கனிடம் முறையிட்டனர். தக்கன் மிகவும் கோபங்கொண்டு சந்திரனைக் கயரோகத்தால் வருந்தும்படி சபித்தான். சாபம் பெற்ற சந்திரன் இத்தலத்திற்கு வந்து பெருமான் திருவருளைப் பெறத் தவஞ்செய்தான். பெருமான் சந்திரனுக்கு முன் தோன்றி காட்சி கொடுத்து அவனுக்குற்ற கயநோயை போக்கியருளினார். இவ்வாறு சந்திரனுடைய கயநோயை நீக்கியதால் பெருமான் வைத்தியநாதர் எனப் பெயர்பெற்றார்.

''வியனுறு சந்திரன் வெய்ய நோயினால்
அயர்வுறாதளித்த லினன்று தான்முதல்
நயமுறு வயித்திய நாத னென்றிடும்
பெயர் படைத்தனன் இளம்பிறைகொள்
வேணியான்''

### 4. திருநந்தி தேவரின் திருமணம் :

வசிட்ட முனிவர் தமக்குள்ள குறையைப் போக்கிக் கொள்ளுமாறு தம் மனைவியான அருந்ததியுடன் இத்தலத்தில் தங்கிப் பெருமானை வழிபட்டு வந்தார். பெருமான் அவருக்குத் திருவருள் புரிந்ததுடன் அவருக்கு ஒரு பெண் மகவையும் அருளினார். பெருமான் அருளால் அருந்ததி ஒரு நன்னாளில் ஒரு பெண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். அக்குழந்தை ஊர்மிளாதேவி என்னும் பெயருடன் அறிவும், திருவும் ஒருங்கமைய வளர்ந்து வந்தது. சிவபக்தியிலும் சிறந்து வளர்ந்தது.

திருவையாற்றில் சிலாத முனிவர் ஐயாறப்பரின் திருவருளாள் ஓர் ஆண் மகவைப் பெற்றிருந்தார். முனிவர் வேள்வி செய்ய நிலத்தை உழுத போது அழகிய பெட்டியில் ஒரு குழந்தை இருக்கக் கண்டு எடுத்து வந்து மனைவியிடம் கொடுத்து வளர்ந்து வரலானார். குழந்தை நந்திகேசுவரர் என்னும் பெயருடன் கல்வி, ஒழுக்கம் முதலியவைகளில் சிறந்து விளங்கியது.

வசிட்ட முனிவர் தம் புதல்விக்கு மணப்பருவம் அமையவே, திருவையாற்றிலுள்ள சிலாத முனிவரின் திருவருட் புதல்வரான நந்திகேஸ்வரருக்குத் திருமணம் செய்து கொடுக்கத் தீர்மானித்தார். சிலாத முனிவர் சுற்றத்தாருடன் தம் புதல்வரை அழைத்துக் கொண்டு மழுபாடி வந்தனர். சிலாத முனிவரின் வேண்டுகோளுக்கிணங்கி ஐயாறப்பரும் அறம் வளர்த்த நாயகியுடன் மழபாடிக்கு எழுந்தருளினார். பங்குனி மாதம் வளர்பிறை புனர்பூசம் கூடிய நன்னாளில் வேதம் முழங்க மறையொலி திகழ ஊர்மிளாதேவிக்கும் நந்தியெம் பெருமானுக்கும் திருமணம் நிறைவேறியது. ஆண்டுதோறும மேற்குறித்த நாளில் திருமண விழா சிறப்பாக நடைபெறுகிறது. இதற்கு 27-வது நாள் திருவையாற்றில் ஏழூர் உலா (சப்த ஸ்தான விழா) நிகழும். இதை நந்திதேவரின் திருமண ஊர்வலம் என்று சொல்வர்.

### 5. சுந்தரருக்குக் கனவில் அருளியது :

சுந்தரமூர்த்தி நாயனார் கண்டியூர் முதலிய பல திருப்பதிகளையும் தரிசித்து பதிகம் பாடிக் கொண்டு திருவாலம்பொழில் என்னும் தலத்தை அடைந்து பெருமானைத் தரிசித்து அவ்விடத்தில் இரவில் துயில் கொண்டார். மழபாடி நாதர் அவருடைய கனவில் தோன்றி 'மழபாடிக்கு வர மறந்தாயோ என்று சொல்லி மறைந்தருளினார். சுந்தரர் விழித்தெழுந்து காவிரி நதியைக் கடந்து மழபாடிக்கு வந்து பெருமானைத் தரிசித்துப் 'பொன்னார் மேனியனே' என்ற பதிகத்தைப் பாடிச்சிலநாள் அவ்விடத்திலேயே தங்கியிருந்தார். இப்பதிகத்தில் ஒவ்வொரு பாட்டிலும் 'மழபாடியுள் மாணிக்கமே' உன்னை அல்லால் இனி யாரை நினைக்கேனே என்ற தொடர்களை வைத்துப் பாடியுள்ளார்.

இவ்வாறே திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் பெருமானைத் தரிசித்து பதிகம் பாடிய திருத்தலம்.

இத்தலம் புள்ளம்பாடிக்கு தென்கிழக்கில் 20கி.மீ. தூரத்திலும், திருவையாற்றிற்கு வடமேற்கில் 15 கி.மீ. தூரத்திலும், அரியலூருக்கு தெற்கில் 28 கி.மீ. தூரத்திலும் உள்ளது. இவ்வூருக்கு திருச்சி, அரியலூர் மற்றும் தஞ்சையிலிருந்து பேருந்து வசதி உள்ளது.


சிறப்பாசிரியர் மற்றும் வெளியிடுவோர் : திருமிகு த. பிச்சாண்டி, இ.ஆ.ப., ஆணையர்.
: தமிழ்நாடு அரசு இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை, சென்னை - 600 034. தொலைபேசி : 28334811/12/13
ஆசிரியர் (கூ.பொ.) : ம. தேவேந்திரன், பி.எஸ்சி., பி.எல்., உதவி ஆணையர்
அச்சிடுவோர் : குணசுந்தரி மாடர்ன் ஆர்ட் பிரிண்டர்ஸ், சென்னை-21. தொலைபேசி : 25967929

# திண்டுக்கல் அருள்மிகு கோட்டை மாரியம்மன் திருக்கோயில்



''ஓம் ஓங்கார ரூப ஓங்கார மந்தர ஓங்கார சக்திவாலை
ரீங்கார மந்திர ரீங்கார ரூப ரீங்கார சக்திவாலை
ஆங்கார மிட்டு ஐங்கோணரூப அருள் ஞான சக்திவாலை
ஓங்காரமிட்டு உயர்ஞானமியும் முழுஞான சக்திவாலை''

தற்போது திண்டுக்கல் என்று பெயர் விளங்கி வரும் இந்நகர், புராண காலத்தில் பத்மகிரி, திண்டிச்சுரம், நெல்லிவனம் என்ற திருநாமங்களுடன் விளங்கி வந்துள்ளது. இந்நகரில் புகழ்பெற்று விளங்கி வரும் அருள்மிகு கோட்டை மாரியம்மன் உள்ளம் உருக வேண்டுபவர்களுக்கு தீராத நோய்களைத் தீர்க்கும் தெய்வமாகவும், வேண்டுவோர்க்கு வேண்டும் வரங்களைத் தந்தருளும் தெய்வமாகவும் விளங்கி வருகிறாள்.

## கோட்டை மாரியை நாடுவோம்! கோடி நலம் பெறுவோமாக !

### காணிக்கை விபரம்

| | |
|---|---|
| மஞ்சள் காப்பு அலங்காரம் காணிக்கை | ரூ. 10.00 |
| திருமஞ்சனப் பாலாபிஷேகம் காணிக்கை | ரூ. 10.00 |
| தழிகை அபிஷேகக் காணிக்கை | ரூ. 5.00 |
| அபிஷேகக் காணிக்கை இனம் ஒவ்வொன்றுக்கு | ரூ. 1.00 (ஒன்று) |
| சாத்துப்படி காணிக்கை | ரூ. 1.00 |
| மூலஸ்தான சிறப்பு பூஜை விஷேச நாட்களில் | ரூ. 5.00 |
| மூலஸ்தான சிறப்பு அனுமதி விஷேசநாள் காணிக்கை நபர் 1க்கு | ரூ. 2.00 |
| அக்கினிச்சட்டி 1க்கு | ரூ. 2.00 |
| தேங்காய், பழம் மாவிளக்கு தட்டு 1க்கு | ரூ. 2.00 |
| முடி காணிக்கை டிக்கட் 1க்கு | ரூ. 10.00 |

இவண்
அறங்காவலர்கள்

பதிவு எண் : TN / PMG / (CCR) / 707 / 06-08 / WPP No. 451/06-08



# ஸ்ரீரங்கம் அருள்மிகு அரங்கநாதசுவாமி திருக்கோயில் வைகுண்டஏகாதசி மகோத்ஸவ



## அழைப்பிதழ்

108 திவ்ய தேசங்களில் முதன்மையானதும், பூலோக வைகுண்டம் பெரியகோயில் என்று அழைக்கப்படுகிற ஸ்ரீரங்கம் அருள்மிகு அரங்கநாதசுவாமி திருக்கோயிலில் நடைபெறும் அனைத்து உற்சவங்களுமே சிறப்பு வாய்ந்தவை ஆகும்.

பிரதி வருஷமும் மார்கழி மாதத்தில் நடைபெறும் திருஅத்யயன உற்சவம் (வைகுண்ட ஏகாதசி, திருமொழி, திருவாய் மொழித் திருநாட்கள்) முக்கிய திருவிழா ஆகும்.

பகல் பத்து, இராப்பத்து 'இயற்பா' என்று 21 நாட்கள் நடைபெறும். இந்த உற்சவத்தில் பகல் பத்தின் போது நம்பெருமாள் அர்ச்சுன மண்டபத்திலும். இராப்பத்து திருநாளில் திருமாமணி மண்டபத்திலும் (ஆயிரங்கால் மண்டபம்), எல்லா ஆழ்வார்கள், ஆச்சாரியர்களுடன் எழுந்தருளிச் சேவை சாதிப்பது மிகவும் சிறப்பாகும்.

பகல் பத்தின் போது திருமொழிப் பாசுரங்களும், இராப்பத்தில் திருவாய்மொழிப் பாசுரங்களும் அபிநயங்களுடன் அரையர்களால் சேவிக்கப்படும். பகல்பத்து திருநாளில், பத்தாம் நாள் நம்பெருமாள் மோகினி அலங்காரத்துடனும். வைகுண்ட ஏகாதசி அன்று நம்பெருமாள் ரத்ன அங்கியுடனும், மூலவர் முத்தங்கியுடனும் சேவை சாதிப்பார்கள்.

வைகுண்ட ஏகாதசியன்று காலை நம்பெருமாள் பரமபதவாசல் வழியே வந்து திருமாமணி மண்டபத்தில் எழுந்தருளுவார். இராப்பத்து எட்டாம் திருநாளில், நம்பெருமாள் குதிரை வாகனத்தில் எழுந்தருளி வேடுபறி கண்டருளுவார். இராப்பத்துச் சாற்று முறையன்று நடைபெறும் நம்மாழ்வார் மோட்சம் சேவிப்பதற்குக் கண்கொள்ளாக் காட்சியாகும். இந்த உற்சவம் நாலாயிர திவ்யப் பிரபந்தத்திற்கும், ஆழ்வார்களுக்கும் ஏற்றமிகு உற்சவமாகித் திருமங்கையாழ்வார் காலம் தொடங்கி நடைபெற்று வருகின்றது.

இந்த உற்சவத்திற்கு அனைவரும் பெருந்திரளாக வந்திருந்து நம்பெருமாளைச் சேவித்து அருள் பெறும்படி அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

நடப்பு 1416ம் பசலியில் வைகுண்ட ஏகாதசி திருவிழா 19.12.2006ல் துவங்கி 9.1.2007ல் முடிவடைகிறது:

**வைகுண்ட ஏகாதசி முக்கிய திருவிழாக்கள்:**

| | |
|---|---|
| **19.12.2006 -** | **திருநெடுந்தாண்டகம்** |
| **20.12.2006 -** | **பகல்பத்து முதல் திருநாள்** |
| **29.12.2006 -** | **மோகினி அலங்காரம்** |
| **30.12.2006 -** | **வைகுண்ட ஏகாதசி பரமபதவாசல் (திருவாசல்) திறப்பு அதிகாலை 4.15 மணி** |
| **5.01.2007 -** | **திருக்கைத்தல சேவை** |
| **6.01.2007 -** | **வேடுபறி** |
| **9.01.2007 -** | **ஆழ்வார் மோட்சம்** |

குறிப்பு :- இத்திருக்கோயிலின் ''நித்திய ஆராதனை கட்டளைத்'' திட்டத்தில் நிரந்தரக்கட்டளை ஏற்படுத்துபவர்களுக்கு முதலீடு செய்வதற்காகத் தாங்கள் செலுத்தும் தொகைக்கு மத்திய அரசின் வருமான வரிச்சட்டம் பிரிவு 80ஜி-ன் கீழ் வருமான வரி விலக்குச் சலுகை உண்டு.

இத்திருக்கோயில் 'அன்னதானத்திட்டத்தில்' தினமும் மதியம் 12.15 மணிக்கு உணவு வழங்கப்பட்டு வருகிறது. ஒரு நாள் செலவுத் தொகை ரூ. 2,500/- நிரந்தர அன்னதானத் திட்டத்திற்கு ரூ. 30,000/- செலுத்துபவர்களுக்கு வருமானவரி விலக்கு உண்டு.

**வேதவியாச ஆர். லக்ஷ்மி நரசிம்ம பட்டர்**
தலத்தார்/சுழல்முறை அறங்காவலர்.

**ப.சிவகுமார்.** பி.எஸ்.சி., பி.எல்.
இணை ஆணையர்/செயல் அலுவலர்
/தக்கார்.